# பதிப்புரை

எத்தனையோ பெரியார்கள் நம்மிடையே தோன்றினார்கள். நாட்டிற்கும், நாட்டில் நிலவும் மொழிக்கும், மொழியைச் சார்ந்த இலக்கியத்திற்கும் பணியாற்றி மறைந்தார்கள். நமக்கு வழிகாட்டும் எண்ணற்ற நிகழ்ச்சிகள் அவர்கள் வாழ்வில் வளமடைந்திருப்பதை நாம் காண்கிறோம்.

'உரிமைக் கவிஞர் பாரதியார்' கண்டமிழில் புதுமைக் கவிகள் பாடி தமிழர் தம் உள்ளத்தில் என்றும் அழியாத இடம் பெற்றவர்; வறுமைச் சூறாவளியில் சிக்கி உழன்ற போதிலும், தாய் நாட்டின் பெருமைக்கு இடையறாது பணியாற்றிய பெரியார். 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம்' செய்ய விரும்பிய இப் பாரதியாரின் வரலாற்றை இளஞ்சிறார்களும் அறிந்துகொள்ள எண்ணியே, இந்நூலை வெளியிட்டுள்ளோம்.

தெள்ளிய நடையில் இந்நூலை உருவாக்கித் தந்த புலவர் அரசு அவர்கட்கு எங்கள் நன்றி. தமிழகம் இந்நூலை ஏற்றுப் பயனெய்துமாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# உரிமைக்கவிஞர்

## பாரதியார்

## க. தோற்றுவாய்

செய்யுள் இயற்றும் புலவனைக் 'கவி' என்பது நூல் வழக்கு. கவி, கமகன், வாதி, வாக்கியெனப் புலவர்களை நால்வகையாகப் பிரிக்கும் முறைகொண்டே இவ்வாறு கூறுவது மரபாயிற்று. ஆனால், இனிய செய்யுட்களைச் செய்யுள் இலக்கணம் மட்டும் அறிந்து சீருந் தளையுஞ் சிதையாமல் இயற்றுவது கவிஞனின் இயல்பன்று. 'காரிகை கற்றுக் கவிபாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்று' என எதுகை மோனையில் மணங் கமழ இயற்றப்பட்டுள்ள பழமொழியொன்றும் இதனை வலியுறுத்தும். ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனும் நால்வகைக் கவிஞரும் வறிதே நூலுணர்ச்சியும் இலக்கண அறிவுங்கொண்டு கவிஞராயினரென்பது ஒப்பக்கூடியதன்று.

தென்னாட்டிலே 'புலவர்' என ஒரு மரபினர் உள்ளனர். அவர்களிற் பெரும்பாலோர் நன்றாக—இலக்கண வழுவற்ற—செய்யுட்களை இயற்றுகிறார்கள். அவர்கள் யாப்பிலக்கணங் கல்லாமலே பாடுகிறார்கள்.

எனவே, 'கவியென்பது வெற்றிலக்கண முயற்சியால் ஆகக்கூடியதன்று; உணர்ச்சி வயப்பட்டது,' என்பது தெளிவாக விளங்கும். கவிஞனின் உள்ளம் கற்பனை நிறைந்தது; நெகிழ்வுமிக்கது; உணர்ச்சியூறியது; கட்டுப்

படாத பறவை ; கரையற்ற கடல்; தெளிந்த வானம் ; சிந்தனைச்சுடர் ; நலமூறும் நிலம் ; தென்றற்காற்று !

கவியென்பது வெற்றுச் சொல்லடுக்கன்று. உணர்ச்சி நிறைந்த ஊற்று ; இருளகற்றும் ஒளிப்பிழம்பு ; மருளகற்றும் வாய்மை மொழி.

வெற்றுச் சொல்லடுக்குகளே நிறைந்த—கற்பனை நயம் இல்லாத—தொடர்கள் செய்யுட்கள் எனப்படா. அவற்றைப் படிப்பவருள்ளத்திலே மகிழ்ச்சியுறுது. உணர்ச்சியற்ற போலிக் கவிதைகளைப் படிப்பது தலைக் குத்து. 'இழுக்குடைய பாட்டிற்கு இசை நன்று.'

இனிய இசையைப்போல உளங்கவரும் கவிதைகளைப் படிப்பதினும் இன்பம் வேறுளதோ ? 'கம்ப நாடன் கவிதையைப்போற் கற்றோர்க் கிதயங் களியாதே' என்பது முற்றும் உண்மை.

நாட்டுப்பற்றின்றி உறங்கிக்கிடந்த தமிழ்மக்களை விழிப்பூட்ட—உரிமையுணர்ச்சியூட்ட—இனிய கவிதைகளைப் பொழிந்த உரிமைக் கவிஞர் பாரதியாரை எங்ஙனம் மறக்கமுடியும் ? போலிக் கவிதைகளான இலை மாலைகளைப் புனைந்து வெறுப்புக்கொண்டிருந்த தமிழ் மக்களுக்கு, இனிய நறுமண மலர்க்கொத்துக்களை மலர் விக்கும் மலர்ப் பூங்காவைக் காட்டியவர் பாரதியார். கற்பனையும் உவமையும் நயக்கும் தமிழ்க் கவிதைகளால் நாட்டுப்பற்றையும், உரிமைவேட்கையையும் பரப்ப முன் வந்தவர் பாரதியார்.

பாண்டிநாடே தமிழ் வளர்த்த கருவூலம். அந் நாட்டிலே வழக்கறிஞர் சிதம்பரனாரும் சிவாவும் சொன் மழை பொழிந்து தென்னாடெங்கும் உரிமைப் பயிரை வளர்த்தனர். பாரதியார் கவிமழை பொழிந்து வளர்த்

தார். கவிதைக் கொண்டலான பாரதியாரின் வரலாற்றை நீங்கள் படிக்கும்போது சிந்திக்க வேண்டியது ஒன்று உண்டு. வறுமையிலே உழன்றவாறு உரிமை வளத்தை வழங்கிய வள்ளலான பாரதியாரைப்போலச் செந்தமிழ்ப் பற்றுடன் தண்டமிழ் நாட்டுப் பணிபுரிந்து 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்தல் வேண்டும்.'

பாரதியாரை நேரில் அறிந்தவர்கள் பலருளர் இந்நாளிலே. அவர்களில், 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்—தேன்வந்து பாயுது காதினிலே' என்பதைக் கூறி, 'எங்கே வந்து பாய்கிறது தேனும் பாலும்? முழு அறியாமை நிறைந்த கருத்து,' என எள்ளி நகையாடும் சிலரும் உளர். இந்த மதிப்புரையிலிருந்தே அந்தச் சிலருடைய நாட்டுப்பற்றை மதிப்பிடலாம். தாம் பிறந்த தாய்நாட்டின் பெயரைக் கேட்கும் காதிலே இன்பத் தேன்பாயாத மக்களைப்பெற்ற நாடு மலடாக இருப்பினும் நன்மையே. பெற்ற தாயையும் பிறந்த பொன்னாட்டையும் நற்றவ வானினும் நனிசிறந்தனவாக நயவாத மக்களை என்னென்பது? தாய்நாட்டின் பெயரைக் கேட்கும்போது மகிழாதவரின் காது மரக்காது தான்! அவர்களின் பேதைமையை நம் உள்ளமும் மறக்காதுதான்! பாரதியாருடனிருந்த பெரும்பாலோர், 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!' என மகிழ்கிறார்கள்.

வங்கக் கவிஞர் தாகூர், தமிழ்க் கவிஞர் பாரதியார்—எனத் தாகூருடன் ஒப்பிட்டுப் புகழத்தக்க சிறப்புடையவர் பாரதியார். அவரைப் பெற்ற தமிழ்நாடு சிறப்புற்றது. அவர் காலத்திலே இருந்த நாமும் சிறப்புற்றோம்.

இத்தகைய சிறப்புடைய கவிஞர் இருந்த காலத்தில் அவரைத் தமிழ்மக்கள் போற்றிக் காப்பாற்றிக்கொள்ள வில்லை. மரமும் செடி கொடிகளும் மட்டும் இருந்த தமிழ்க்காவிலே தனியே பாரதிக் குயில் கூவி மகிழ்ந் திருந்ததே தவிர, ஆதரவு பெறவில்லை. கூவிக் கூவி மடிந்தது. மடிந்தபின், கண்கெட்ட பிறகு கதிரவனை வணங்க முற்பட்டது தமிழுலகம், பாரதி மண்டபம் போன்ற நினைவுச் சின்னம் எழுப்பியது. நினைவுநாள் கொண்டாடுகிறது. பாரதியின் கனவு பலித்து உரிமை பெற்ற பிறகு. அவரிருக்கும்போது அவருக்குப் பயன் படாத தமிழ்நாடு, பாரதியைப் பயன்படுத்திக்கொள்ள முன்வருகிறது. 'பாரதியின் பாட்டுக்கள் தமிழ்நாட்டின் பொதுச் சொத்து,' என உரிமை கொண்டாடுகிறது. இதுதான் உலக இயற்கை போலும்!

## உ. பிள்ளைக்கவி

### தோற்றம்

சங்கம் பல இருந்து தமிழாய்ந்த நாடு பாண்டி நாடு. பாண்டியநாட்டரசரே முத்தமிழையும் முச்சங்கத்தையும் வளர்த்தவர்கள். பொது இல் ஆகிய, பொதியில் என்னும் பொதியமலை பாண்டியநாட்டிலே உள்ளது. அது சங்கமிருந்த மலையென அதன் பெயரே கூறும். (பொது + இல் = பொதியில்—பொது இடம்—சங்கம்) வையை என்னும் பொய்யாக் குலக்கொடியின் நறுநீர் பருகிய பாண்டிமக்கள் தமிழ்ப்பால் பருகியதைப்போற் பிற நாட்டு மக்கள் பருகவில்லையெனலாம்.

இத்தகைய நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த எட்டையபுரத்திலேதான் பாரதியார் பிறந்தார். எட்டையபுர மன்னர் தமிழ்ப்புலவர்களை ஆதரித்திருக்கலாம்; தமிழ்மொழியை வளர்த்திருக்கலாம். எனினும், பாஞ்சாலங்குறிச்சி வீரரை வெள்ளையருக்குக் காட்டிக்கொடுத்து, வெள்ளையராட்சிக் கால் கோளுக்குத் துணைபுரிந்து, மறையாப் பழியைத் தேடிக் கொண்ட மரபினர் அவர். அப்பழியெல்லாம் பாரதியார் பிறந்ததனுல் நீங்கிவிடுமா? பாரதியாரின் தந்தை சின்ன சாமி ஐயர் தாயார் இலக்குமி அம்மாள். பிறந்த காலம் 1882-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் மூல நாள்.

எட்டையபுரம் ஒரு பெரிய ஜமீன். பாஞ்சாலங்குறிச்சி வீரரைக் காட்டிக்கொடுத்ததால் ஆங்கில ஆட்சியில்—அடிமைத்திருவில்—நல்ல செல்வாக்குடன் இருந்தது. அந்த ஜமீனில் சின்னசாமி ஐயரும் அலுவல் பார்த்தார். முதல் முதல் தென்னுட்டில் நெசவு ஆலை நிறுவ முயன்றவர் அவரே யென்பர். கணக்கிலே சிறந்த

தேர்ச்சியுடையவர். தமிழ்க்கவிகள் இயற்றுவதிலும் இனிய பழக்கமுடையவர்.

சின்னசாமி ஐயருக்குத் தம் அருமை மகனுரைப் பொறிக்கலையிலே வல்லவராக்கிவிட வேண்டுமென்ற பேராவல் உள்ளத்திலே ஊறிக்கொண்டிருந்தது. அதற் கேற்றவாறு கணிதப் பயிற்சியிலே தொடக்கத்திலிருந்தே தோய்ந்துவரச் செய்ய விரும்பினுர், பாரதியாரின் பாட்டனுர் பெயர் சுப்பிரமணிய ஐயர். அப் பெயரையே பாரதியாரும் பெற்றிருந்தார். அப்பெயர் செல்வப் பெயராக மாறியதனுற் 'சுப்பையா' ஆயிற்று. சுப்பையா தம் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றும் இயல்பினராக இல்லை. பொறிக்கலைக்குக் கணக்குப் பயிற்சி வேண்டும். கணக்கென்ருற் பிணக்குக்கொள்ளும் மனத்தினராயிருந் தார் சுப்பையா. மற்றும் பள்ளிப் படிப்பென்ருல் எள்ளி நகையாடித் திரிவார். எனினும், தந்தையார் வற்புறுத் தலுக்கஞ்சிப் பள்ளிக்குச் சென்று வந்தார். பள்ளிக்குச் சென்ருர் என்பதைவிடச் செல்வதாக நடித்தார் என்பது பொருத்தமானது.

### அன்னையின் பிரிவு

பாரதியாரின் அன்னையார் தம் மகனைச் சான்ருேனுகப் பார்த்து மகிழாமலே - பாரதியாரின் ஐந்தாம் வயதில் - இவ்வுலக வாழ்வை நீத்தார். பாரதியாருக்குத் தம் அன்னையை நினைவுகூட்டவும் முடியாதாம். தாயற்ற குழந்தைகளைக் கண்டால் திகைத்து நின்று விடுவாராம். அவருடைய உள்ளம் என்ன நினைக்குமோ? 'தாயற்ற போதே சீரற்று விடும்' என்று ஏங்கி நிற்பார் போலும்!

### சிற்றன்னை

பாரதியாருக்குப் பின் பாகீரதி யெனும் பெண் பிறந்திருந்தது. இரு குழந்தைகளையும் பாராட்டிச் சீராட்டி வளர்க்க 'வள்ளி' யென்னும் பெண்ணை மணந்தார் சின்னசாமி ஐயர். அந்த அம்மைக்கும் ஒரு பிள்ளையும் பெண்ணும் பிறந்தனர். பாரதியாரும் அவர் தங்கையும் மாற்றாந்தாயாரிடம் கொடுமையுறவில்லை. 'பெற்ற அன்னையினும் பெரிய அன்னையாகவே அந்த அம்மையார் குழந்தைகளை ஓம்பிவந்தார். தம் குழந்தைகளும் மூத்தாள் குழந்தைகளும் அவருக்கு வேறுபாடின்றியே காணப்பெற்றனர். அவ்வகையில் பாரதியார் கொடுத்துவைத்தவரே.

சின்னசாமி ஐயருக்கும் தம் மக்கள் நன்றாக முன்னுக்கு வரவேண்டும் என்று அளவுகடந்த ஆர்வமிருந்தது. அவர்களிடம் பேரன்புடையவராக இருந்தார். எனினும், அன்புஉள்ளத்திற் பதிவிருக்குமே யொழிய வெளிப்படையாகப் பெருகாது.

### கல்வி பயின்ற பள்ளி

பாரதியார் ஐந்தாம் வயது வருமுன்னரே பள்ளிக்கனுப்பப் பெற்றார். பள்ளியோ இவருக்குச் சள்ளையாக இருந்தது என முன்னரே அறிவோம். பாடச்சுவடிகளையும் எழுதும் கற்பலகையையும் எங்காவது வைத்துவிட்டுத் தோப்புந் துரவுமாகத் தேடி விளையாடித் திரிவார். வீட்டுக்கு வரும்போது புத்தகமும் பலகையும் போன வழி தெரியாமல் மறந்து வெறுங்கையராக வருவார். சிற்றன்னையார் இந்நிலையைப் பாரதியாரின் தந்தைக்குத் தெரிவியாமல் அடக்கிவிட்டு வேறு பலகை புத்தகங்கள் வாங்கிக் கொடுப்பார். பாரதியாருக்குத்

தாம் பள்ளிக்குச் செல்வது புலியைப் புல்லருந்த விடுவது போல இருக்குமாம்.

பள்ளியிற் பயில்விப்பதோடு நில்லாமல் தாமே கணக்குச் சொல்லித்தர முயன்றார் சின்னசாமி ஐயர். அம்முறையிலும் பாரதியாருக்குத் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றமுடியவில்லை. கணக்குப் போடச் சொன்னால் விழித்துக்கொண்டிருப்பாராம். ஏன் விழிக்கிறாயென்று தந்தை வினவினாற் 'பழி' போல அமர்ந்திருப்பாராம். இவ்வாறு கணக்கிற் 'சுழி'யே வாங்குவாராம். பாரதியாரின் வாழ்க்கையிலே எப்பொழுதும் எதுவும் கணக்கெனும் இணக்கம் பெற்றதில்லையாம்.

'குழந்தை சுப்பையன் தாயற்றவன்' என்ற எண்ணத்தினாற் சின்னசாமி ஐயர் கைநீட்டி அடிக்காமற் கணக்கிலே சுழித்துக்கொள்வதை நோக்கிக் கவலையுற்றார். பள்ளிப்படிப்பிலே கணக்கிற்கு வந்த கதி உடற்பயிற்சிக்கும் வந்தது. உடற்பயிற்சி வகுப்பை ஏமாற்றி விடுவார். அதனால், அவர் பிற்காலத்தில் உடலுரம் பெறாதவராக மெலிந்தவராக இருந்தார். உடற்பயிற்சி செய்வோரைக் கண்டால் உளம் பதைக்க அக் காட்சியிலே ஈடுபடுவார். தமக்கு அத்தகைய உடலமைப்பில்லையே யென வருந்துவார், மாணவர்கள் உடற்பயிற்சியிலே ஊக்கம் செலுத்துதல் வேண்டும். இன்றேல், அவர்களும் பாரதியாரைப் போலவே வருந்த நேரிடும். 'உடம்பாரழியில் உயிரார் அழிவார்'; ' சுவரின்றி ஓவியம் வரையமுடியாது'; நம் நாட்டு இளைஞர்கள் திண்ணிய உடலும் உரமும் உடையவர்களாக விளங்கவேண்டும். பழைய உடற்பயிற்சிகளும் விளையாட்டுக்களும் ஓங்கி மாணவர்களிடத்தில் வளரும் நாள் வந்தால் நன்றாயிருக்கும், தற்காப்புக்

கும் வழியின்றி மெல்லியலாரே போலப் - பூப்போன்ற மெய்யராக - இருக்கும் இளைஞர்களால் நாடு நலனெய்துதல் எங்ஙனம்? காளைகளாக விளங்கும் இளைஞர்களால் நம் நாடு நிரம்புவதாக!

கவிதை

பள்ளியிற் படிக்கும் பிள்ளைப் பருவத்திலே பாடங்களிலும் உடற்பயிற்சியிலும் ஓடாத உள்ளம் இயற்கைக் காட்சிகளிலே ஓடியது; கற்பனையிலே களித்தது. தாம் படிக்கும் தாயுமானவர் பாடல், கம்பன் பாட்டு, பாரதப் பாட்டு முதலியவற்றைப் போலத் தனிப்பாடல்கள் பாடத் தொடங்கிவிட்டார் சுப்பையா. பள்ளியிலும், எட்டையபுரம் சமஸ்தானத்திலும் அவருடைய கவிதைத் திறனை நோக்கிக் களித்தனர். பெருங் கவிவாணரைப் போலவே பிள்ளைக்கவி விளங்கினாரெனல் பொய்யன்று. சமஸ்தானத்திலே பாரதியாருக்கு உரிமை மிகுதி. எனவே, அடிக்கடி தம் கவிதையை எட்டையபுரம் மன்னருக்கும் புலவர்கட்கும் படித்துக் காட்டுவார். அவர்களும் இவரை வரவழைத்துப் பாடச்சொல்லி ஊக்குவார்கள். 1893-இல் சமஸ்தானமே இவருக்குப் பிள்ளைப்பருவத்திற் 'பாரதி' பட்டம் பரிவுடன் அளித்தது. துக்கடாப் பாட்டுக்களும் தனிச்செய்யுள்களும் சிந்துகளுமாகப் பிள்ளைப்பாரதி பொழிந்து தள்ளினார். ஆனால், இவற்றைத் தந்தையாரறியாமலே செய்து வந்தார். தந்தையாரிடம் இவருக்கு மிகுதியும் அச்சமும் கூச்சமும் இருக்கும்.

எட்டையபுரம் மன்னர் ஒருநாள் சின்னசாமிஐயரை அழைத்து, 'ஐயரே! சுப்பையாவை மகனாகப் பெற்றதற்கு நீர் நல்ல நோன்பு நோற்றிருக்கவேண்டும்,' என்று

பாராட்டிய பிறகுதான் ஐயர் அறிந்தார். எனினும், பொறிக்கலைஞனாகச் சீமைப்படிப்பு முடித்துவிட்டு வர வேண்டுமெனப் பேராவல் கொண்டிருந்த அவர் உள்ளம் களிப்படையவில்லை. தமிழ்க்கவி சோறுபோடுமா என்று அவர் எண்ணியிருக்கவேண்டும். அவர் பிடிவாதமான உள்ளமுடையவராம். எனவே, தம் கருத்து முற்றுமற் போவது அவருக்கு விருப்பமூட்டுமா ?

### பாரதி சின்னப்பயல்

திருநெல்வேலி இந்து பள்ளியிற் பாரதியார் படித்தார். அங்கும் இவருடைய கவிதைச் சுவைக்குப் பாராட்டுதல் கிடைத்தது. காந்திமதிநாதன் என்றொரு குறும்பு நண்பர் இவருக்கு இருந்தார். அவர் ஒருநாள் பாரதியாரின் 'ஆசுகவி'த் திறமையை மட்டந்தட்ட விரும்பினார். நண்பர்கள் முன்னிலையிற் பாரதியாரைப், 'பாரதிசின்னப் பயல்' என்ற ஈற்றடி கொண்ட வெண்பாவைப் பாடுமாறு வினவினாராம். பாரதியார் தம் நண்பரின் குறும்புத் தனத்தைக் கண்டு சிறிதும் தாழ்க்காமல், 'காந்திமதி நாதனைப் — பாரதி சின்னப் பயல்' என்று பாடி அவரையே மட்டந்தட்டினாராம். வெண்பாவை முற்றும் பாடி மூன்றாவது அடியின் இறுதியிற் 'காந்திமதி நாதனை' என்று கூட்டிவிட்டதனாற், 'காந்திமதிநாதனைப் பார், அதிசின்னப்பயல்' எனப் பொருள்பட முடிந்தது. பாரதியின் திறமை கண்ட நண்பர்கள் கைதட்டி ஆரவாரித்தனர். பாரதியைச் சின்னப்பயலெனச் செப்பி, 'அதி சின்னப்பயல்' ஆகிய காந்திமதிநாதரோ வெள்கி நின்றார்.

### பள்ளிப் பாடம்

இவ்வாறு கவிதைக் காதல்கொண்டு உலாவிய பிள்ளைப்பாரதிக்குப் பாடத்திற் சிறிதும் கருத்துச்

செல்லாமற்போனதில் வியப்பில்லை. எனினும், பாடத் தேர்வுகளிற் கூடியவரையில் தேர்வுக்குரிய 'குறியீடு' பெற்றுவிடுவார். ஆசிரியர்களுக்குப் பாரதியாரின் கவித் திறமையால் மகிழ்வு உண்டாயினும், பாடம் படித்து வந்து வகுப்பில் ஒப்பிக்காமல் இருப்பதிற் சிறிது வருத்தமே. நல்ல படிப்பும் இருந்தால் இவருடைய கவிதையும் இணைந்து ஒளிவீசும் என்பது அவர்களுடைய விருப்பம்.

ஒருமுறை தமிழாசிரியர் இவர் தமிழ்ப்பாட்டு ஒப்பிக்கமுடியாமல் விழிக்கும்போது, 'காளமேகமெனக் கவிமழை பொழிவாயே, இப்போது பொழிவதுதானே?" என்றாராம், பாரதியாரும் சிறிதும் சிந்திக்காமல், 'காள மேகம் தனக்குத் தோன்றியபோதுதானே பொழியும்? நாம் விரும்பியபோது பொழியுமா?' என்று பிள்ளைமை யால் விடை கூறினாராம்.

பாரதியாருக்குப் பள்ளிப்படிப்பாற் சிறிதும் நன்மை உண்டாகவில்லையெனத் தெரிகிறது. அவரே தம் கவி தையில் தம் படிப்பைப்பற்றி,

"செலவு தந்தைக்கோ ராயிரம் சென்றது !
தீமை யெற்குப்பல் லாயிரம் சேர்ந்தன !
நலமோ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்,"

என இவ்வாறு கூறுவது இக்கருத்தை வலியுறுத்து கிறது. இக்காலக் கல்வி அடிமைப்புத்தியை வளர்க்கும் ஏட்டுக்கல்வியாகவே யிருப்பதைக்கண்டு அவ்வாறு கூறியிருப்பாரெனவும் கொள்ளலாம். உரிமையுலகிலே உலவ விரும்பும் உள்ளம் அடிமையுலகில் ஆழ விரும் புமா? காந்தியடிகளும் இத்தகைய கருத்துடையவ ராகவே இருந்தனரெனத் தெரிகிறது. மற்றும், இக்

காலக் கல்விமுறை மாணவர்களை வீணே கிளிப்பிள்ளைக ளாக ஆக்கி, ஒழுக்கத்தை அறவே ஒழிக்கும் வகையில் அமைந்திருப்பதை உணரார் யாவர்?

ஆகவே, பள்ளியில் நடந்த 'மெட்ரிகுலேஷன்—செலக்ஷன்' தேர்விலே (1896-இல்) தவறிவிட்டார். அப்போது இவருக்குப் பதினான்கே வயதுதான். பாரதியார் இதுபற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. வழக்கம் போற் கவிபாடித்திரிவதும், இயற்கை அன்னையின் எழிலிலே ஈடுபடுவதும், தெருக்கூத்துக்களைக் கண்டு சிந்தை களிப்பதுமாக இருந்தார். உரிமைவேட்கை கொண்ட பாரதியின் உள்ளத்திலே அப்போது கண்ட 'பாஞ்சாலி துகிலுரிதல்' என்னும் நாடகமே பெண்ணடிமைத்தன்மையைப் பிழிந்து காட்டியிருத்தல் வேண்டும். 'பாஞ்சாலி சபதம்' பாட அப்போதே உள்ளத்தில் விதையூன்றியிருத்தல் வேண்டும். 'ஆண்களோடு பெண்களும்—சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே' எனப் பாடுமாறு தூண்டியிருத்தல்வேண்டும். 'உள்ளத்தில் உண்மைஒளி உண்டாயின்' பிறகே 'வாக்கினிலே ஒளி உண்டாதல்' இயற்கை. 'பாஞ்சாலி சபதம்' பாரதத்தாயின் அடிமைத்தளையை நினைவூட்டும் ஓவியம் அன்றோ!

### திருமணம்—தந்தைபிரிவு

பாரதியாரின் பதினைந்தாம் அகவையில் (1897-இல்) ஏழுவயதுடைய செல்லம்மாளைத் திருமணம் புரிந்தார். செல்லம்மாளின் பிறப்பிடம் கீழக்கடையம். இது திருநெல்வேலி மாவட்டத்திலேயே உள்ளது. திருமணம் மிகவும் சிறப்புடன் நடந்தது. எட்டையபுரம் மன்னரின் ஆதரவைப்பெற்ற குடும்பத்தின் திருமணமன்றோ! எனினும், அக்காலத்திய பெரும்பான்மை வழக்கத்தின்படி குழந்

தைத் திருமணமே நடந்ததென்பது குறிப்பிடத்தக்கது. காதலின் மணமே வீசாத ஏழுவயதுச் சிறுமியைக், 'காதல் ஒருவனைக் கைப்பிடித்தே—அவன்—காரியம் யாவினும் கைகொடுத்து' வாழவேண்டும் எனப் பிற்காலத்திற் பெண்களின் உரிமை பாடிய பாரதியார் மணக்க நேர்ந்தது சமூகத்திலுள்ள குறையே யன்றோ?

திருமணம் நிகழ்ந்த சில திங்களிலேயே பாரதியாரின் தந்தையார் தம் மனக்கோட்டையை யெல்லாம் மறந்து, பாரதியைச் சீமைப்படிப்புக் கனுப்புவதற்கு மாருகக் குடும்பப் படிப்பிலே ஈடுபடுத்திவிட்டு இவ்வுலகைவிட்டுப் பிரிந்துவிட்டார். விளையாட்டுச் சிறுமியை வாழ்க்கைத்துணைவியாக ஏற்றதுபோலவே, விளையாட்டுப் பருவத்திலேயே குடும்பச்சுமையை ஏற்கநேர்ந்த பாரதியாரின் நிலையை எங்ஙனம் விளக்குவது? சின்னசாமி ஐயர் தம் காலத்திலேயே கையிலிருந்த பொருளை யெல்லாங் கரைத்துவிட்டார். எனவே, 'இன்னு இளமை'யே ஆதரவாகக்கொண்ட பாரதியாரின் வாழ்க்கைப்பூங்கா எவ்வளவு இனிமையாக இருந்திருக்குமோ? மற்றும், தந்தையாரின் கண்டிப்புக்குக் கட்டுப்பட்டுப் படித்த பாரதியாரின் உள்ளம் அதற்கு ஒரு முழுக்குப் போடாமல் என்ன செய்யும்?

### அரண்மனைப் பழக்கம்

எனினும், நாம் நினைப்பதுபோலப் பாரதியாரைக் குடும்பக்கவலை பிடித்துக்கொள்ளவில்லை. 'இடுக்கண் வருங்கால் நகும்' அவருடைய இயற்கை இப்போது கட்டின்றித் திரியத்தொடங்கியது. 'தந்தையோடு கல்வி'யை இழந்த பாரதியார், எட்டையபுரம் அரண்மனையிலேயே ஊன்றிப் பழகலானார். இவருடைய

கவிதையூற்றிலே முழுகிய மன்னர் இவரைத் தம்முட னேயே எப்போதும் இருத்திக்கொண்டார்.

மன்னருடன் பழகும் பாரதியாருக்குக் கவலை எதற்கு? பாரதியாரின் 'நோஞ்சல்' உடம்பைக்கண்டு மன்னர் மனக்கவலை கொண்டார். 'பாரதி! நீ உன் உடம்பை இவ்வாறு வைத்துக்கொள்ளலாமா? நன்றாகப் பசியெடுத்து நிறையச் சாப்பிடவேண்டாமா?' என்று சிறிது சிறிதாகப் பசியிலே பசியெடுக்கச்செய்தார். 'பெரிய இடத்துப்' பேச்சிலே பாரதியார் கட்டுப்படாமல் என்ன செய்ய இயலும்? மன்னர் விரைந்தவாறு பசி யெடுக்கும் மருந்து சிறிது சிறிதாக உட்கொள்ளப் பழகி ஞர். அது என்ன மருந்து? கஞ்சா உருண்டைதான்! அந்தோ! அக்கொடிய பழக்கந்தான் அரசருடைய நட்பி ஞற் கிடைத்த நன்மை!

### காசியில்

இக்காலத்திற் காசியில் பாரதியாருடைய அத்தை இருந்தார். அவர் கணவர் கிருஷ்ணசிவன் என்பவர் காசியில் ஒரு மடத்தில் தலைமை அலுவல் செய்துவந்தார். 1901-இல் பாரதியாரை அந்த அம்மை தம்மிடம் வரவழைத்துக்கொண்டார். காசிக்குச் சென்ற பாரதி யார் அங்குள்ள இந்து கல்லூரியைச்சார்ந்த உயர்நிலைப் பள்ளியில் 'மெட்ரிகுலேஷன்' வகுப்பிற் சேர்ந்து படித் தார். அப் பள்ளியில் தமிழ் இல்லை. தமிழுக்குப்பதிலாக இந்துஸ்தானியும், வடமொழியும் எடுத்துக்கொண்டார். வடநாட்டுக்குச் சென்றவுடன் பாரதியாரை வடநாட்டுப் பழக்கம் பிடித்துக்கொண்டது. தலைப்பாகையும் சட்டை யும் மீசையுமாக உலாவத் தொடங்கிஞர். இந்துஸ்தானி யுடன் அதன் இசையும் இவருடைய நாவில் உலாவியது.

தலையிற் 'கிராப்பு' வேறு முளைத்தது. வைதிகப் பிராமண மரபுக்கேலாத இச்செயல்கள் இவருடைய அத்தையின் கணவருக்குப் பிடிக்கவில்லை.

அந்நாளிலே திலகரின் நாட்டுப்பற்றின் மணம் நாடெங்கும் வீசியது. அது பாரதியாரையும் பற்றியது. அவருடைய உள்ளத்தில் நாட்டுப் பத்திரிகைகள் நாட்டுப் பற்றை நாட்டிவிட்டன. அத்தையின் கணவரான கிருஷ்ணசிவனார் சைவப்பற்றிலே தவழ, மருமகனார் நாட்டுப்பற்றிலே நடந்தார்.

பள்ளிப் படிப்புமுறை காசிக்குப் போயும் விடவில்லை. ஒருநாள் காலையிற் செல்வார். மற்றொருநாள் மாலையிற் செல்வார். சிலநாட்கள் காலையும் செல்லார்; மாலையும் செல்லார்; பள்ளிக்குச் செல்லும்போதும் கையிற் பாடநூல் இராது; பென்சிலும் குறிப்புச் சுவடியுமே இருக்கும். நல்ல 'சில்க்' சட்டையும், பச்சைக்கல் மோதிரமும் இவர் வருகையைப் பள்ளிக்கு அறிவிக்கும். பள்ளிக்குச் சென்ற பிறகும் பாடத்தை நோக்கமாட்டார். பாட்டும் உரைநடையுமாக ஆசிரியரைப்பற்றிய நகைச் சுவைக் குறிப்புக்களை எழுதுவதும், அடுத்த மாணவனிடம் நீட்டுவதும், இருவரும் நகைப்பதும், சிறிது சிறிதாகப் பரவி வகுப்பு முழுவதும் நகைப்பதுமாகப் பொழுதுபோகும். ஆசிரியர் அறிந்து வினவுமுன் அருமை மாணவர் பாரதியார் வெளியேறிவிடுவார். வீட்டு மாடியில் அமர்ந்து கங்கையாற்றுக் கவினை நோக்குவதுதான் இவர் பிறகு படிக்கும் படிப்பு !

இவ்வாறு பள்ளியைப் பராமுகஞ் செய்தாலும் பாடத்தைப் பராமுகஞ் செய்யமாட்டார். தமிழுக்குப் பதிலாக அங்குச்சென்ற பிறகே எடுத்துக்கொண்ட

இந்துஸ்தானியிலும், வடமொழியிலும் தவருமல் 'மெட்ரிகுலேஷன்' தேர்வில் முதல் வகுப்பில் தேறினர்.

பிறகு, கல்லூரியிற் சேர்ந்து எப். ஏ. வகுப்பில் ஓராண்டு கற்ருர்; ஏனே தொடர்ந்து படிக்கவில்லை.

கிருஷ்ண சிவனுர்க்கும் பாரதியாரின் அத்தைக்கும் இவருடைய நாட்டுப்பற்று எங்கே தொல்லையிற் கொண்டுவந்துவிடுமோ என்ற கவலையிருந்தது. பாரதியாரின் வாழ்க்கைத்துணைவியார் திருநெல்வேலிச் சீமையிற் கடையத்திலேதான் (தாய் வீட்டில்) இருந்தார். அவருக்கும் பாரதியார் திலகர் கட்சியிற் சேர்ந்துவிட்டது தெரிந்தது. ஆகவே, அந்த அம்மையாரும் மிகவும் பணிவுடன் தாம் அச்சமுறுவதை அறிவித்தார். அதற்கு விடையாகக் 'கவலையுருதே' என எழுதினர். தமிழ் கற்கும்படியும் பணித்தார்.

---

## ௩. தொழில்

### அரண்மனைக் கவிஞர்

இந்நிலையில், எட்டையபுரம் அரசர் 'டில்லி'க்குச் சென்று திரும்பி வரும்போது காசியில் தங்கினர். தம் அருமைப் பாரதியாரைப் பிரிந்திருக்க அவர் மனம் ஒவ்வவில்லை. 'ஆகையால், வற்புறுத்தித் தம்முடன் எட்டையபுரத்திற்கு அழைத்து வந்துவிட்டார். கல்லூரிப் படிப்பு கைநழுவியது. அரண்மனைக்குக் கவிஞர் ஆகிவிட்டார். பாரதியாரின் விருப்பப்படியே இருக்க அரசர் இடங் கொடுத்தார். எட்டையபுரம் வந்தவுடன் செல்லம்மாள் வந்து சேர்ந்தார். இல்லறம் தொடங்கியது.

அரண்மனையிலே பாரதியாருக்குக் குறிப்பிட்ட அலுவல் எதுவுமில்லை. ஊதியமும் இவ்வளவென்றில்லை. மன்னர் மகிழ நடந்துகொள்ளவேண்டும். எப்போதும் அவருடன் கவிதைபாடிக் களிப்புறச்செய்தல் வேண்டும். அவர் விரும்பும் நூல்களைப் படித்துக்காட்ட வேண்டும். அவரைப் புகழ்ந்தும் கவிதை புனைதல் வேண்டும்.

ஒருமுறை அரண்மனையிலிருக்கும் புலவர்கள் அண்ணாமலை ரெட்டியார் என்பவராற் பாடப்பெற்ற காவடிச்சிந்து என்னும் சிறுநூல் ஒன்றின் நயத்தையும் கற்பனையையும் புகழ்ந்துகொண்டிருந்தனர். 'பாரதியால் இவ்வாறு பாடமுடியுமோ?' என்றும் எளிமை செய்தனர். பாரதியார் ஒன்றும் உரைக்கவில்லை. மறுநாள் ஒரு சிறந்த காவடிச்சிந்து மன்னருக்குப் பாரதியாரிடமிருந்துவந்தது. அதன் அழகிய சிறந்த நடையும் பொருளுங் கண்டு மன்னர் வியந்தார். புலவர்களும் போற்றினர். பாரதியாரின் திறமையைப் பலபடப் பாராட்டினர்.

மன்னருடன் ஒருமுறை சென்னை சென்றார் பாரதியார். மன்னர் ஐந்நூறு ரூபா கொடுத்தார். வளமிகு பல தமிழ் நூல்களும் மனைக்கெனச் சில சிறு பொருள்களும் வாங்கிவிட்டார் அப்பொருளுக்கு. மன்னர் நல்கிய ஊதியத்துக்கு இது ஒரு சான்று.

கற்பனைச் சிறகடித்துக் காவியப் பூங்காவில் உரிமையொடு பறக்கும் கவிக் கிள்ளையான பாரதியாருக்குப் பொற்கூடான அரண்மனைக் கவிஞர்வேலை பிடிக்கவில்லை. மற்றும், மன்னருடைய நட்பு அவருடைய மனத்திலே மகிழ்வூட்டவில்லை. அவருடைய பழக்கத்தை வெறுத்தார். நீரிலிருக்குந் தவளைக்கும் நிலத்திலிருக்கும் எலிக்கும் எவ்வாறு உறவு பிடிக்கும்?

அரண்மனைச் சேவகத்தை விட்டால் வாழ்க்கைக்கு ஊதியம் வரும்வழி என்னவென்று சிந்தித்தார். சேற்றைவிட்டுக் காலை யெடுத்துத்தானே கழுவவேண்டும்? பற்றியிருக்கும் கொம்பைவிட்டுத் தாவினாலன்றோ மற்றொரு கொம்பைக் குரங்கு பற்றமுடியும்? மற்றொரு கொம்பு கைக்குப்படாவிட்டால்? மண்டையுடைந்து மடியவேண்டுவதுதான். எனினும், உரிமை மூச்சுவிடத் துடிக்கும் மீன் எவ்வளவு நேரம் நீரின் உள்ளேயே அடங்கியிருக்கும்? எனவே, அரண்மனை வேலையை உதறிவிட்டுக் கிளம்பினார்.

### தமிழாசிரியர்

மதுரைக் கல்லூரியில் இனிய புலமையும் குழந்தையுள்ளமும் படைத்த கோபால கிருஷ்ணய்யர் என்பவர் நம் பாரதியாரை வரவேற்றுச் சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் வேலைபெற வகைசெய்தார். 1901-இல் இவ்வேலையைப் பெற்றார். மூன்று திங்கள்

வரையிலேதான் தமிழாசிரியர் வேலை இவருக்குப் பிடித்தது. கட்டுப்பாட்டுக் கடங்கிக் கரடுமுரடான நெறியிலே செய்யும் தமிழ்ப்பணிதான் தமிழாசிரியர் பணி. நிலையற்ற மனப்போக்குடைய பாரதியாருக்கு அவ்வேலையில் உள்ளம் ஊன்றவில்லை.

கோபாலகிருஷ்ண ஐயர் பாரதியாரின் கவிதைச் சிறப்புக் கண்டு களித்தார். பாரதியாருக்கு வேண்டுவன செய்ய விழைவுகொண்டார். அவருக்குச் 'சுதேச மித்திரன்' பத்திரிகைத் தலைவரான சுப்பிரமணியஐயரை நன்குகத்தெரியும். அவர் ஒருமுறை மதுரைக்கு வந்தபோது, 'உணர்ச்சிததும்பும் தமிழ்நடை யெழுதும் ஓரிளைஞர் வேண்டும்,' என ஐயரை வினவினர். ஐயர் மகிழ்வுடன் பாரதியாரை அறிமுகஞ் செய்துவைத்தார். பாரதியாருடைய கவிதைத் திறனைக்கண்ட சுப்பிரமணிய ஐயர் தம்முடன் அழைத்துச் சென்று துணையாசிரியராக அமர்த்திவிட்டார்.

### பத்திரிகை ஆசிரியர்—உரிமைக்கவிஞர்

1904 முதல் 1907 வரையிற் சுதேசமித்திரனில் அமர்ந்து பணிபுரிந்தார். அங்கு அவர் செய்த வேலை ஆங்கிலச் செய்தியைத் தமிழில் மொழிபெயர்ப்பதும், தந்திகளையும், ஆங்காங்கே நிகழ்த்தப்படும் சொற்பொழிவுகளையும், சிறந்த அறிஞர்களின் கட்டுரைகளையும் பார்த்துத் தெளிவுசெய்து வெளியிடுவதுந்தான். பாரதியாரின் புரட்சிகரமான கருத்துக்களின்படி தலையங்கமும் மதிப்புரைகளும் எழுதினுல் பத்திரிகை நின்றுவிடுமோ என்ற அச்சத்தால் அவற்றை ஜி. சுப்பிரமணிய ஐயரே வெளியிட்டார். அவருக்கும் புரட்சிகரமான கருத்திருந்தாலும் அரசாங்கத்தின் போக்கையும் நாட்

டின் நிலையையும் நிறுத்துப்பார்த்துத்தான் பத்திரிகை நடைபெறவேண்டும் என்னும் எண்ணத்தினால் விழுங் கப்பட்டிருந்தார்.

அவர் பாரதியாரைத் தட்டிக்கொடுத்து வேலை வாங்குவதிலே வல்லாளராயிருந்தார். ஏதாவது சிறந்த பெரியார்களின் பேச்சு ஆங்கிலத்திலே வந்திருந்தால், ஐயரவர்களின் இனிய மொழியிலே ஈடுபட்ட பாரதியார் அதனை வீட்டிற்குக் கொண்டுவந்தேனும் மொழிபெயர்த் துக்கொண்டுபோய் மித்திரனில் வெளியிடுவார். பாரதி யாரின் தமிழ்நடை ஐயரைக் கவர்ந்துகொண்டது. எனினும், ஊதியத்தை இறுகப்பிடித்தே ஈந்தார். 'எழுத்துக்கு இலட்சம் பொன் கொடுக்கலாம் பாரதிக்கு! என்றாலும், நான் மிகுந்த பொருள் படைத்தேனில்லையே! என்று நயம்படவுரைப்பார். எனவே, மித்திரன் துணை யாசிரியர் அலுவலும் அவர் வறுமையைப் போக்க வில்லை. தம்மையும் தம்மைப்போன்ற எழுத்தாளர் நிலையையும் எண்ணியெண்ணி எள்ளிநகையாடுவார் பாரதியார். 'அலுவலகத்திலே ஒரு ரூபா உயர்வு கிடைத் தால், வீட்டிலே இரண்டு குழந்தைகள் எண்ணிக்கை உயர்வு கிடைக்கும்,' என்று இரக்கம்பட இயம்புவார். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று வள்ளுவர் மொழிந்த வாய்மைக்கு எடுத்துக்காட்டு இவரே எனலாம்.

இவ்வாறு இவருக்குப் பொருள்வருவாயும் தொழில்முறையும் இருந்தாலும் எவ்வளவோ நன்மை கள் கிடைத்தன. ஆங்கிலத்தில் உள்ள அரிய கருத்துக் களைத் தமிழில் மொழிபெயர்ப்பது மிகவும் இயலாத நிலை என்று அக்கால அறிவாளிகள் அறைவார்கள். பாரதியார், அவர்கள் மொழியைப் பொய்யாக்கி அழகுற

மொழிபெயர்க்க முடியும் என்று விளக்கிவிட்டார். அம் முறையிலே நல்ல தேர்ச்சியும் பெற்றார்.

மற்றும், மித்திரன் அலுவல் பாரதியாருடைய கவிதைகள் பலருடைய உள்ளத்திலே ஊன்றிப் படர வழியாயிற்று. நாடெங்கும் இயங்கிய சுதேசி இயக்கத்திலே கலந்த இவருடைய பாட்டுக்களைக் கண்டு மகிழ்ந்து, அவற்றை உரிமையுணர்ச்சிமிக்க நாட்டுப் பாடல்களாக வெளிவரும்படி ஊக்கம் ஊட்டியவர்களில் முதன்மையானவர் கப்பலோட்டிய தமிழ் வீரரான வழக்கறிஞர் சிதம்பரனார் ஆவர். 'என் உள்ளத் துடிப்புக்களே பாரதியின் நாவில் வரும் பாடல்கள்,' என்று அப் பெரியார் புகழ்ந்து கூறுவாராம். வங்காளப் பிரிவினையை எதிர்த்து அக்காலத்திற் சுதேசி இயக்கத்தை நாட்டில் எழுப்பினார் திலகர். அதனால் வடநாட்டிலே திலகரும், விபினசந்திர பாலரும், லாலா லஜபதிராயும், தமிழகத்திலே வீரர் சிதம்பரனாரும் எழுப்பிய உரிமை முழக்கத்திலே உள்ளத்தை ஈடுபடுத்தித் தம் கவிதைக் கருவூலத்தை வளம்படுத்திக்கொண்டார் பாரதியார். சிதம்பரனார் கப்பல்கள் வாங்கப் பொருள் திரட்டச் சென்னை வந்தபோது பாரதியாரும் துணைபுரிந்து பொருளீட்டித் தந்திருக்கிறார். சிதம்பரனாரைச் சிறைப்படுத்தி அரசியல் புரட்சிக்காரரா என விசாரணை நடத்திய ஆங்கில அறமன்றத்திற்குச் சென்று சிதம்பரனார் குற்றமற்றவர் எனச் சான்று பகர்ந்துளார். சிதம்பரனாரைச் சிறைப்படுத்தியதை எண்ணி யெண்ணிக் கசிந்து பாடியிருக்கிறார்.

சுதேசமித்திரனிற் பணிபுரிந்த மற்றொரு சுப்பிரமணிய பாரதியாரின் நட்பு இவருக்குக் கிடைத்தது.

அவர் வரகவி. அவரும் பாரதியாரைப் போலவே இனிய கவிகள் இயற்றுவார். உரைநடையும் உவகை தரும்.

சட்டத்தலைவராக அக்காலத்தில் விளங்கிய டி. வி. கிருஷ்ணசாமி ஐயரும், 'போலீஸ் டெபுடி கமிஷன'ராக இருந்த கிருஷ்ணசாமி ஐயரும், டாக்டர் நஞ்சுண்டராவும், மண்டையம் சீனிவாசாச்சாரியார், மண்டையம் திருமலாச்சாரியார், எம். பி. திருமலாச்சாரியார், வி. எஸ். துரைசாமி ஐயர், சுரேந்திரநாத் ஆரியா, வி. சர்க்கரைச் செட்டியார் என்பவர்களும் நண்பர்களானார்கள். இவர்களாற் பாரதியார் அடைந்த நன்மைகள் பல. பாரதியாருடைய நாட்டுப்பாடல்களைப் பரப்ப இவர்களுடைய துணை பெரிதும் உதவியது.

---

# ௪. நாட்டுத் தொண்டு

1906-இல் கல்கத்தாவில் தாதாபாய் நௌரோஜி தலைமையிற் காங்கிரஸ் பேரவை கூடியது. அதற்குப் பாரதியார் சென்றார். தாதாபாய் நௌரோஜியின் உரிமைப்பேச்சு பாரதியாரின் உள்ளத்திலே நன்கு பதிந்து நரம்புகளிலே பரவியது. உரிமைப் பணிக்குத் தம்மைக் காணிக்கையாக்கும் நிலையடைந்தார் பாரதியார். அப்பேரவை செய்த நான்கு முடிவுகளிலும் ஈடுபட்டார். அவை: நாட்டுப் பொருள்களை ஆதரித்தல், வெளிநாட்டுப் பொருள்களை விலக்குதல், நாட்டுக் கல்வி, உரிமை ஆட்சி என்பவை.

அப்போது கல்கத்தாவைச் சார்ந்த 'டம்டம்' என்ற ஊரில் 'நிவேதிதை' என்ற ஆங்கிலப் பெண்மணியார் இருந்தார். அவர் விவேகானந்தரின் மாணவியார். அவரைப் பாரதியார் கண்டார். அம்மையாருக்குப் பாரத நாட்டின்மீதிருந்த பற்றைக் கண்டு வியந்தார். மற்றும், அம்மையார் பல இளைஞர்களை நாட்டுப்பணியிலே நாட்டங்கொள்ளச் செய்துவந்தார். பாரதியார், அம்மையாரிடமிருந்து நாட்டுப்பணி, சமநெறி, பெண் விடுதலை ஆகிய முப்பணிகளில் ஈடுபடுவதாக ஒப்புக் கொண்டார். இமயமலையிலிருந்து கொண்டுவந்திருந்த ஓர் இலையை நிவேதிதையார் இவருக்கு அளித்தார். அந்த இலையைப் பொன்னேபோல் தம் ஆயுள்வரை போற்றிவந்த பாரதியார் அம்மையாரைத் தம் குருவாகவும் உளங்கொண்டார்.

## 'இந்தியா'வில்

பாரதியார் சென்னைக்கு வந்தவுடன் தம் நாட்டுப் பற்றுக்கேற்ற புரட்சிமுறையில் ஒரு வெளியீடு

தொடங்க விரும்பினார். அந்நாளில் சென்னையில் விவே கானந்தரின் வெளியீடாகப் 'பிரம்மவாதி' என்ற வேதாந்த இதழ் நடந்தது. அதன் ஆசிரியராக இருந்த ந. திருமலாச்சாரியார் என்பவரின் உள்ளம் நாட்டுப் பற்று முழக்கத்திலே ஈடுபட்டது. அதற்கேற்ப ஒரு நல்ல இதழை வெளியிட விரும்பினார் அவர். அந்த அன் பருடைய ஆதரவினாலே பாரதியாரை ஆசிரியராகக் கொண்டு 'இந்தியா' என்ற வார இதழ் எழுந்தது. அது சிறந்த நாட்டுக்கவிகளையும், கட்டுரைகளையும் வெளியிடத் தொடங்கியது. இது தொடங்கிய காலம் 1907-ஏப்ரல் ஆகும்.

'இந்தியா' முழுதும் பாரதியே ஆகும். கவிதையும் உரைநடையுமாக உரிமை வேட்கையைத் தமிழ்நாட் டிற்கு வாரி வழங்கியது இந்தியா; உள்ளதை உள்ள வாறே அஞ்சாமல் எடுத்துரைக்குந் திண்மையும் கவிதை யும் உள்ளுறையுடைய கேலிப்படங்களும் பெரியோர் களின் வரலாறும் என இவ் வகையிலே தமிழ்நாட்டுக் காங்கிரஸின் கருத்தை விளக்கியது. பாரதியாரின் பெய ரும் பரவியது.

இக்காலத்திலே வடநாட்டிலும் நவசக்தி, யுகாந் தரம், வந்தேமாதரம், நியூ இந்தியா முதலான இதழ்கள் தோன்றிப் புரட்சித்தேனைத் துளித்தன. நாடெங்கும் உரிமையாட்சியின் வேட்கை குமுறியது.

இங்கிலையில், விபின்சந்திரபாலர் வடநாட்டில் உரிமை முரசு கொட்டிக்கொண்டு சுற்றிவந்தார். அவ ரைப் பாரதியார் சென்னைக்கு அழைத்து வந்தார். அவரை வரவேற்கச் சென்னையிலுள்ள தலைவர்கள் அஞ்சினார்கள். புரட்சிக்கனல் என்றால் அத்துணை நடுக்

கம் அடைந்த காலம் அது. சுதேசமித்திரன் ஆசிரியர் சுப்பிரமணிய ஐயர் ஒருவரே துணிவுடன் பாரதியாருக்குத் துணைபுரிந்தார். விபின்பாபுவின் சொற்பொழிவுக்குத் தலைமை வகித்தார். விபின் முகில், ஐந்து சொற்பொழிவுகள் பொழிந்தது. அச் சொற்பொழிவுகளாற் சென்னை மக்களின் உள்ளத்திலே உரிமைப்பயிர் முளைக்கத் தொடங்கியது. சுதேசி இயக்கத்தின் கொள்கைகள் வேரூன்றின.

சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் வெளிநாட்டுத் துணிகளுக்கு முதன்முதலாகத் தீ வைக்கப்பட்டது. விபின்சந்திரரின் சொற்பொழிவிலே தோன்றிய புரட்சித் தீ சென்னைமக்களின் உள்ளத்திலே எழுந்து நூற்றுக்கணக்கான 'ஆல்பாக்கா' சட்டைகளிலும், உயர்ந்த 'தொப்பி'களிலும் பற்றி எரிந்தது. 'சென்னை ஜனசங்கம்' என ஒரு புரட்சிக்கழகம் அப்போதே பாரதியாரால் நிறுவப்பட்டது.

இக்காலத்திலேதான் தென்னாட்டுப் புரட்சிவீரர் சிதம்பரனாருடைய ஆதரவு பாரதியாருக்குக் கிடைத்தது. சிதம்பரனாரின் கருத்துக்களை 'இந்தியா' எடுத்து மொழிந்தது. சிதம்பரனார் கப்பல் கொண்டுவந்ததை ஓவியத்தின் வாயிலாக மக்களுக்கு விளக்கியது.

பாரதியார் எழுத்தோடு நில்லாமற் பேச்சின் வாயிலாகவும் உரிமை முழக்கம் புரிந்தார். சென்னைக் கடற்கரையிலே தொடர்ச்சியாகக் கடலலையுடன் பாரதியாரின் பேச்சு முழக்கலையும் பாட்டு முழக்கலையும் கலந்து மக்களைக் கடற்கரைக்கு இழுத்துவந்தன. பாரதியின் பேச்சைக் கேட்க இளைஞர்கள் திரண்டு வரலாயினர்.

### 'சூரத்' காங்கிரஸ்

1907-இல் சூரத்திற் காங்கிரஸ் பேரவை கூடியது. அப்போது காங்கிரஸிலே 'மிதவாதிகள்' என ஒரு கட்சியார் இருந்தனர். அக் கட்சியின் தலைவர் கோபால கிருஷ்ண கோகலே; மற்றொரு கட்சியாரான தீவிரவாதிகளின் தலைவர் திலகர். 1906-இல் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸில் முடிவுசெய்த திட்டங்களை உருப்படாமற் செய்துவிட வேண்டுமெனக் கோகலேயின் கட்சியினர் குறிக்கொண்டனர். இவர்களுக்கு ஆங்கில அரசாங்கத்தின் ஊன்றுகோல் இருந்தது. திலகர் கட்சியினர் நாகபுரியிற் கூட்டம் நடத்த இருந்ததை மாற்றிக் கொண்டு சூரத்திற்கு வந்தனர். அவர்கள் அங்கு நடக்கும் பேரவைக்கு லாலா லஜபதிராயைத் தலைவராக்க எண்ணினர்; கோகலே கட்சியினர் 'இராஸவிகாரி கோஷ்' என்பவரைத் தலைவராக்க முற்பட்டனர். இரு கட்சியினரையும் ஒற்றுமைப்படுத்த லஜபதிராய் முயன்றார்; பயனற்றது.

திலகரின் கட்சியை ஆதரிக்கத் தென்னாட்டிலிருந்து சிதம்பரம் கட்சியினர் பாரதியாரை உள்ளிட்டு நூற்றுவர் சென்றனர். மிதவாதிகளும் சென்றனர். அந்தோ! காங்கிரஸ் பேரவை குழப்பத்திலே குலைந்தது. இரு கட்சியினரும் சொல்லடியும் செருப்படியும் நாற்காலியடியும் பரிமாறிக்கொண்டு பிரிந்தனர். ஆங்கில அரசாங்கம் அகமகிழ்ந்தது.

சூரத்துக்குச் சென்றபோதுதான் திலகரைக் காணும் பேறு பாரதியாருக்குக் கிடைத்தது. அவரைக் காணச்சென்றபோது நல்ல மழை பெய்துகொண்டிருந்தது. பேரவை நிகழும் கொட்டகைக்கும் உறுப்பினர்

(பிரதிநிதிகள்) தங்கியிருந்த இடத்திற்கும் இடையே உள்ள பாதையைச் செப்பனிட்டுக்கொண்டிருந்த ஆட்களைக் குடை பிடித்துக்கொண்டு மேற்பார்வை செய்து கொண்டிருந்தார் திலகர். பாரதியார் அவரைத் தேடிச் சென்றபோது யாரும் அறிமுகஞ் செய்யவுமில்லை. திலகரின் அனல் கக்கும் விழிகளைக் கண்டே வணங்கித் தம் மைத்தாமே அறிமுகஞ்செய்துகொண்டார் என்பர்.

பாரதியார் சூரத்திலிருந்து வந்தவுடன், 'உள்நாட்டுப் பொருள்களையே வாங்கவேண்டும்; வெளிநாட்டாடையை விலக்கல் வேண்டும்' என்று சென்னைக் கடற்கரையிலும் 'இந்தியா'விலும் முரசறைந்தார், சிதம்பரனாரும் சிவாவும் திருநெல்வேலியில் அக் கருத்தை முழக்கினர்.

### அடக்குமுறை

மிதவாதிகளின் ஆதரவு அரசாங்கத்திற்குக் கிடைத்ததால் தீவிரவாதிகளை அடக்க அரசாங்கம் முற்பட்டது. உரிமைநாள் கொண்டாட நாடும் ஒருப்பட்டது. விபின் சந்திரர் (வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சியிற் சிறை சென்றிருந்து) விடுதலையை முன்னிட்டுத் திருநெல்வேலியிற் சிதம்பரனார் விடுதலைக் கொண்டாட்டம் நிகழ்த்தினார்.

அரசாங்கம் அடக்குமுறை வாளை உயர்த்தியது. அஞ்சவில்லை நாடு. திலகருக்கு ஆறு 'ஆண்டு சிறைக்' கூடம். லஜபதிராய் நாடு கடத்தப்பட்டார். சிதம்பரனார் இருபதாண்டு அந்தமானில் அமரவேண்டுமென்றனர், இறுதியில் ஆறு ஆண்டுகளாக உள்நாட்டிலேயே செக்கிழுக்கும் சிறைவாழ்வு பெற்றார். அப்போது 'இந்தியா' இதழின் தலைவர் சிறைப்பட்டார். பாரதியாரையும் சிறைப்படுத்தத் திட்டமிட்டது அரசாங்கம்.

பாரதியாரின் நண்பர்கள் கூடி ஆராய்ந்தனர். அவருடைய கவிதைத் தேனைப் பருகாமல் இருப்பது ஒவ்வாது என உறுதிசெய்தனர். உரிமைக் கவிஞரின் நிலையிலிருந்து பாரதியாரை விடுதலைசெய்ய எண்ணினர். மெல்ல மெல்லப் பாரதியாரின் மனத்தை மாற்றினர். சைதாப்பேட்டையில் புகைவண்டியில் ரயில் ஏறிப் புதுச்சேரியை விடிய நான்கு நாழிகைக்குச் சென்றடைந்தார் பாரதியார். புகைவண்டிநிலையத்திலேயே கதிரவன் புறப்படும் வரை காத்திருந்து விடிந்தபிறகு புதுவையிலே புதியவராகி நுழைந்தார்.

### புதுவையிலே புதுமைக் கவி

1908 - இல் ஆங்கில அரசாங்கத்தின் அடக்குமுறைக்கு அஞ்சிச் சிறகடித்துப் பறக்கும் செந்தமிழ்க் கிளி, கூட்டிற் குமைய நடுங்கிப்—புதுவைக்குப் போய்ச் சேர்ந்தது. புதுவை பிரஞ்சு நகர்; ஆங்கில ஆட்சிக்குட்பட்டதன்று; குடியரசு. ஆங்கில எல்லையிலுள்ள மக்கள் கடன்காரரின் தொல்லைக்கஞ்சிப் பதுங்கும் இடம் புதுச்சேரி. அங்கே பைந்தமிழ்க் கவிஞர் போய்ச் சேர்ந்தார். சென்னையிலிருந்து ஒரு நண்பர் புதுவை சிட்டி—குப்புசாமி ஐயங்கார் என்பவருக்கு அறிமுகச் சீட்டுக் கொடுத்திருந்தார். அவரொரு தமிழறிஞராம். ஆகவே, பாரதியாருக்கு இடங்கொடுத்து ஆதரவு செய்தார்.

பாரதியார் புதுவை புகுந்த செய்தி பரவியது. ஆங்கில அரசாங்கம் ஒற்றரை விடுத்தது. ஒற்றர் குப்புசாமி ஐயங்காரைக் குறுகினர். 'பாரதி அரசியற் பகைவர். அவருக்கு இடங்கொடுத்தால் உமது மடம் போய்விடும். அரசாங்கத்தார் ஒறுப்பார்கள்' என்றனர்.

ஐயங்கார் அஞ்சி நடுங்கிவிட்டார். கோழையான் அவர், 'பாரதியாரே! நான் மிகவும் ஏழை. அரசாங்கத் திற்கு அஞ்சுகிறேன். தாங்கள் வேறிடம் சார்வதே தக்கது' என்று வேண்டிக்கொண்டார். இரண்டொரு நாள் எல்லே வேண்டினார் பாரதியார். இடங் கிடைக்க வில்லை: ஏக்கம்பிடித்து நின்றார்; அங்கிலேயிலே அங்கு ஒருவர் வந்தார். அவர் குவளை—கிருஷ்ணமாச்சாரி எனப் பெயரினர். அவர் பாரதியாரை அழைத்துச்சென்று சுந்தரேசையர் என்னும் நண்பரிடம் நட்பாக்கினார். பாரதியாரின் கவலே பறந்தது. தகுந்த வீடு அமர்த்தி வேண்டுவன யாவும் செய்துகொடுத்தார் சுந்தரேசர். பிறகு, சிலநாட்களுக்கெல்லாம் மண்டையம் சீனிவாசாச் சாரியார் என்பவர் சென்னையிலிருந்து வந்துசேர்ந்தார். பாரதியாரின் குடும்பம் புதுவையில் தொடங்கியது.

பாரதியாரின் வாழ்க்கைத்துணைவி செல்லம்மாளின் தமையனார் அப்பாத்துரையின் ஆதரவு கிடைத்தது. நண் பர்கள் பலரினர். பொன்னு—முருகேசம் பிள்ளை, பாரதி தாசன் எனப் பிறகு புகழ்பெற்ற கனக—சுப்புரத்தினம், நெல்லையப்பர், குவளைக்கண்ணன், அரிகரசர்மா, சங்கர கிருஷ்ணன், தேதாத்திரி, தேவசிகாமணி முதலானோர் அரிய நண்பர்களிற் சிலர். யாவரும் நாட்டுப்பற்றிலே நட்டவர்கள்.

### இந்தியா

இந்த நண்பர்களுடனும் வறுமையுடனும் பாரதி யார் தமது வாழ்வைத் தொடங்கினார். சென்னையி லிருந்து 'இந்தியா' இதழின் அச்சுப்பொறி முதலியன புதுவைக்கே வந்துவிட்டன. மண்டையம் சீனிவாசாச் சாரியார் இப்பணியை ஏற்று நடத்தினார். வங்காளத்

திலே அரவிந்தரால் நடத்தப்பெற்ற 'கர்மயோகி'யின் கருத்துக்கள் 'இந்தியா'விலே இடம்பெற்றன. 'டில்லி'யில் 'இந்திய விடுதி'யிலிருந்து வ. வே. சுப்பிரமணிய ஐயர் இந்திய விடுதலை முரசை 'இந்தியா'விலே எழுப்பினர். 'இந்தியா'வின் பேச்சுக்கள் ஆங்கில ஆட்சியின் எல்லையிலும் அடக்குமுறைக்கண்ணிற் படாமல் உலவின.

### அரவிந்தர்

வங்காளத்தில் அலிபூர் சிறையிலிருந்து நீங்கிய அரவிந்தர் 'கர்மயோகி' 'தர்மா' என்னும் இதழ்களைவெளியிட்டுக்கொண்டிருந்தார். அவர் கருத்துக்கள் 'இந்தியா'வில் வெளியாயின. அரவிந்தரும் ஆங்கில அரசாட்சியின் அடக்குமுறை வெடிகுண்டுக்கு அஞ்சவேண்டிவந்தது. ஆகவே, அரவிந்தரும் 4-4-1910-இல் வந்து சேர்ந்து விட்டார் புதுவைக்கு. அரவிந்தர் வந்தபிறகு பாரதியாரும் அரவிந்தரிடம் இணைந்தார்; தம் வாழ்க்கைப் போக்கைப் புதுப்பித்தார். வேதாந்த வழியிலே நடந்தார். அரவிந்தரும் சிறந்த வங்கக் கவிஞர். வங்கக் கவியும் தமிழ்க் கவியும் புதுவையிற் புதுவழியிலே பொலிவுற்றன. நாட்டுப்பற்றினும் வேதாந்தப்பற்றிலே விளக்கமுற்றனர் இருவரும்.

### வ. வே. சுப்பிரமணிய ஐயர்

லண்டனிற் கல்விகற்கச் சென்ற இளைஞர்களிற் சிலர் 'இந்திய விடுதி' என ஓரில்லத்திற்குப் பெயர் வைத்துத் தங்கியிருந்தனர். அவர்களுக்கு இந்தியாவை ஆங்கிலர் கையிலிருந்து மீட்கவேண்டுமென மீளா வேட்கை யுண்டாயிற்று. அதற்காகப் புரட்சித் திட்டங்கள் பல மேற்கொண்டனர். அவர்களுடைய நினைவு,

படைக்கருவிகளினாலேயே ஆங்கிலேயரை விரட்டவேண்டும் என்பது. அவர்களில் முதன்மை பெற்றவர்கள் வீர சவர்க்காரும், வ. வே. சுப்பிரமணிய ஐயரும், டாக்டர். ராஜனும் ஆவர். இவர்களில் வ. வே. சு. ஐயர் தம் 'பாரிஸ்டர்' பட்டத்தையுந் துறந்து புரட்சிக்கனலிற் குதித்தவர். 'இந்திய விடுதி' ஆங்கில ஒற்றர்களால் முற்றுகையிடப்பெற்றபோது, அது கலைக்கப்பெற்றது. சவர்க்கார் சிறைப்பட்டு, ஆயுள்வரை அந்தமான் சிறை வாழ்வு மேற்கொண்டபோது வ. வே. சு. ஐயர் பாரிஸிற் பதுங்கவேண்டியிருந்தது. அங்கு ஓராண்டு கழித்து விட்டு, ஒற்றர்கள் கண்ணில் மண்ணைப்போட்டுப் புதுவைக்கு வந்துசேர்ந்தார். அவரைப் பாரதியாரும் அரவிந்தரும் வரவேற்றனர். ஐயருடைய ஆதரவும் பாரதியாருக்குக் கிடைத்தது.

ஐயர் நல்ல உடற்கட்டுடையவர். நம்நாட்டு உடற்பயிற்சிகளை எப்போதும் செய்வார். வாள்வீச்சும், துப்பாக்கிப் பயிற்சியும் செய்வார். கடலில் நீந்துவார். லண்டனிற் செய்துவந்த புரட்சி வேலைகளை இங்கும் மேற்கொண்டிருந்தார். சிறந்த கட்டுரைகள் 'இந்தியா'வில் வெளியாயின. பாரதியார் ஐயருடைய உடற்பயிற்சியையும் படைக்கலப் பயிற்சியையுங்கண்டு களிப்படைந்தார். பாரதியாருக்குத் தாமும் அவரைப்போற் பயின்று உடல்வன்மை பெறவேண்டும் என ஒழியா ஆவலுண்டாயிற்று. எனினும், அவருடைய மெலிந்த மெய் அவருடன் ஒத்துழைக்கவில்லை. வாள்வீச்சுப் பழகவும் கடலில் நீந்தவும் முயன்றார்; முடியவில்லை. உள்ளம் உரம்பெறவேண்டுமெனில், உடலும்உரம்பெறல்வேண்டுமென்பதை உணர்ந்தார். இளமையில் உடற்பயிற்சியைப் புறக்கணித்த பிழையை யுணர்ந்து வருந்தினார்.

ஐயரும் பாரதியாரும் சதுரங்கம் ஆடுவது வழக்கம். ஐயர் வாய்ப்பு நேரும்போது காய்களை வெட்டத் தயங்க மாட்டார். போரில் எதிரியின் படைகளை வெட்டாமல் வெற்றிபெறுவது முடியுமா? ஆனால், பாரதியாரோ வாய்ப்பு நேரினும் எதிரியின் காய்களை வெட்டமாட்டார். காய்கள் குழந்தைகள் போன்றனவாம்! அவற்றை வெட்டுவது பாவமாம்! ஐயர் வெட்டும்போதெல்லாம், 'ஐயரே! இவ்வாறு இரக்கமின்றி வெட்டாதீர்! உமக்குப் பிள்ளைகுட்டிகள் பிறப்பது குதிரைக்கொம்பாய் முடியும்' என்று கவலையுடன் கூறுவாராம். இவ்வாறு ஆடும் சதுரங்கத்திலே வெற்றி எவருக்குக் கிடைக்கும்?

பாரதியார் புதுவையிற் பன்னிரண்டாண்டுகள் பஞ்சுபடும் பாடுபட்டுக் காலத்தை வென்றார். அங்கே நிகழ்ந்தவற்றைக் கோவைப்படுத்திக்கூறல் இயலாது எனினும், இங்கும் அங்குமாகச் சிலவற்றைக் கூறு வோம்.

புதுவையில் 'தூப்ளே' தெருவில் ஒரு வீட்டைக் குடிக்கூலிக்கு எடுத்துக்கொண்டு, 'இந்தியா'வை அங் கிருந்து வெளியிட்டனர். புதுவையிலே குடியிருக்கும் உரிமையையுடைய இலக்குமி நாராயண ஐயர் என்பவ ரைப் பொறுப்பாளியாக (ஜாமீனாக)க் கொண்டு இந்தியா வெளிவந்தது. இது சென்னையில் வெளிவந்தபோது பாரதியாரை அரசாங்கத்தார் சிறைப்படுத்த முயற்சித் ததை முன்னரே அறிவோம். புதுவையில் வந்தபோதும் அரசாங்கம் 'இந்தியா' வைத்தடுக்க வழிதேடியது. அந்த இதழில், 'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்? என்று தணியும் எங்கள் அடிமையில் மோகம்' என்பது போன்ற விடுதலை உணர்ச்சியூட்டும் பாட்டுக்கள் வெளி

வரத்தொடங்கின. உரிமைவேட்கை ஊறுமல் அடிமைக் குருதியே மக்களின் உடலெங்கும் ஓடும் அக்காலத்தில், ஆங்கில அரசாங்கம் தனக்கு வாழ்த்துக்கூறும் மாக்களை யன்றித் தனக்கு மாமுன மக்களை அறியாத அக்காலத் தில், இத்தகைய பாட்டுக்களையும் கட்டுரைகளையும் உடைய 'இந்தியா' எங்ஙனம் வாழமுடியும்?

'இந்தியா'வை மறைவாகப் படிப்பவர்களையன்றி வெளிப்படையாகப் படிக்க விரும்புவோர் குறைந்தனர். ஊர் புதிது. 'இந்தியா'வுக்குக் கருவூலம் இல்லை. விற்பனை யாகும் பொருளைக்கொண்டே வெளிவரல்வேண்டும். இதமோ புதுவையிலிருந்து ஒழுங்காக வெளியூர் செல்வ தில்லை. வெளியிலிருந்தும் சந்தாப்பணம் புதுவைக்குள் ஒழுங்காக நுழைவதில்லை. எல்லாம் அரசாங்கத்தின் திருவிளையாடல். அஞ்சல்நிலையத்தில் எப்போதும் இதனுல் சில்லறைச் சச்சரவு நேரும். பாரதியாரும், 'இந்தியா' அலுவலாளர்களும் பட்டினியிருக்கும் நிலையும் வந்தது. ஆகவே, 'இந்தியா' நிற்கும்படி நேர்ந்தது. 1910-இல் அரவிந்தர் வந்தபிறகு 'கர்மயோகி' என்ற இதழைப் பாரதியார் நடத்திவந்தார். அதுவும் சிறிது காலத்தில் நின்றுவிட்டது. பிறகு, 'தர்மம்' நடந்து நின்றது.

### விளக்கெண்ணெய்ச் செட்டியார் வீடு

'இந்தியா' நின்றபிறகு, பாரதியார் புதுவையில் ஈசுவரன் தர்மராசா கோயில் தெருக்கோடியில் ஒரு செட்டியார் வீட்டிலே குடிக்கூலிக்கு அமர்ந்தார். அங் கேயே அவர் புதுவை வாழ்க்கை நடந்தது. அந்தச் செட்டியார் பெயர் சபாபதி செட்டியார். பாரதியாரின் பண்பறிந்து நடந்துகொள்வார். குடிக்கூலியை வற்புறுத்

திக் கேட்கமாட்டார். கொடுத்தபோது வாங்கிக்கொள் வார். இவ்வாறு வழுவழுவென்று நடப்பதனுல் இவ ரைப் பாரதியார் விளக்கெண்ணெய்ச் செட்டியார் என்றே அழைப்பது வழக்கம்.

ஒருமுறை பாரதியாரின் பாட்டான, 'ஜெயமுண்டு பயமில்லை மனமே' என்ற பாட்டைப் பாரதியாரும் அவர் பெண் தங்கம்மாளும் பாடிக்கொண்டிருந்தார்கள். இசை மிகவும் இனியது. மனக்கவலை மாற்றும் மருந்து அதுவே. இசையின் இனிமை எத்தகைய வாட்டத்தை யும் மாற்றி இன்பவூற்றைப் பருகுவிக்கும். பாரதியாரின் வறுமைத்துயரம் அவருடைய பாட்டுக்களினுலே விலகு வது வழக்கம். அன்றும் மனத்தென்புக்காக அதனைப் பாடிக்கொண்டிருந்தனர்.

அப்போது, பாரதியாரின் மனைவியார் இவர்க ளிருந்த மாடிக்கு வந்து 'சபாபதி செட்டியார் வந்திருக் கிறார்' எனத் தெரிவித்தார். பாரதியார் உள்ளம் கலங் கியது. சில நொடிகள் வாளா விருந்தார். பிறகு, பெரு மூச்சுவிட்டு, 'நான்கு திங்கள் குடிக்கூலி தரவேண்டுமே! மிகவும் சால்புடையவராதலால் நெருக்கிக் கேட்கமாட் டார். வழுவழுவென்று அவரிருப்பதாலேதான் நாமும் அவர் இல்லத்திலே அமைதியுடன் இருக்கிறோம். எனி னும் நம் மனம் ஒவ்வாது. எங்ஙனமாவது கொடுத்து விடலாமென்றால் எவ்வகையினும் பணம் பெயரவில் லையே! செட்டியாரின் பொறுமை கடலினும் பெரிதா யிருப்பதால் நாம் தப்பினேம். அவரைத் தெய்வப் பிறப்பென்றே செப்புதல் வேண்டும்,' என்று செப்பினர். பிறகு,

சபாபதிக்கு வேறு தெய்வம்
சமானமாகுமா?—புதுவை (சபாபதி)
அபார அருளுடைமையினுல்
அடக்கிச் சினந்தன்னை
அன்பினை மேற்கொண்டான்—புதுவை (சபா)

என்று பாடிக்கொண்டிருந்தார். செட்டியாரும் அப்போது அங்கு வந்தார். 'புதுப்பாட்டு எழுதியிருக்கிறீர்களா ?' என வினவினர். ஆம் என்ருர் பாரதியார். விளக்கெண்ணெய்ச் செட்டியார் பாரதியாரின் மனநிலையை ஒருவாறு உணர்ந்தார்.

"பாரதியாரே! நான் குடிக்கூலி கேட்க வரவில்லை! தாங்கள் புகழும் பொறுமையும் என்னிடம் இதுவரை இல்லை. இனிமேல் தங்கள் அருளால் வரவேண்டும்," என்று கூறிப் பணிவுடன் வீடு திரும்பினர். பாரதியாரின் வறுமைக்கேற்ற வீடு ; வீட்டுக்காரர்! என்னே வறுமையின் நிலை!

### வெல்லச்சுச் செட்டியார்

பாரதியாரின் நண்பர்களில் ஒருவர் கிருஷ்ணசாமிச் செட்டியார் என்பவர். அவர் ஏறக்குறைய இருபது வயதுடையவர் அக்காலத்தில். குட்டையாகத் தடித்த திண்ணிய மெய்யினர். ஆகையால், அவரைப் பாரதியார் 'வெல்லச்சுச் செட்டியார்' என்று புனைபெயரிட்டுக் கூப்பிடுவது வழக்கம். வெல்லம் இனியது. செட்டியாரும் இனியவர், செல்வமுடையவர், பாரதியாரின் பாடல்களைச் சுவையுடன் கேட்பவர், புதுவைக்கு வடக்கே ஒரு கல் தொலைவில் முத்தியாலுப்பேட்டையில் வாழ்பவர்.

பாரதியார் இல்லத்தில் எப்பொழுதும் அன்பர்களின் குழு கூடியவாறே இருக்கும். எப்போதாவது

'வெல்லச்சு' வருவார். வந்தவுடன் பாரதியாருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு ஒரு மூலையில் அமர்ந்துவிடுவார். போகும்போது பத்து ரூபா கொடுத்துவிட்டுப் போவார்.

அவரைக் கண்டவுடன் பாரதியார் சிலநாட்களிற் கதையொன்று கூறுவார்.

ஒரு செட்டியாரும் ஒரு குடியானவனும் காட்டு வழியே ஓர் ஊருக்குப் போனார்கள் வழியில் இருட்டியது. திருடர் வழிமறித்துக்கொண்டனர். குடியானவன் அகப்பட்டுக்கொண்டான். செட்டியார் கட்டை போலப் படுத்துக் கொண்டார். குடியானவனிடமிருந்ததைப் பறித்துக்கொண்ட திருடர்கள் இருட்டில் ஆளென்று தெரிந்துகொள்ளாமற் கட்டையென்று காலால் இடித்துப் பார்த்துவிட்டுப் போகத்தொடங்கினர். அப்போது செட்டியார், 'உங்கள் வீட்டுக் கட்டை பத்து ரூபாய் முடிந்திருக்குமோ,' என்றார். அவர்கள் 'அப்படியா' என்று செட்டியாரிடமுள்ள பணத்தையும் பிடுங்கிச் சென்றனர்.

இக் கதையைக் கூறிய பிறகு வெல்லச்சுச் செட்டியாரைப் பார்த்துச், 'செட்டியாரே! கதை சரிதானே?' என்பார் பாரதியார். செட்டியார், 'கதை எப்படி இருந்தாலும் இப்போதுதானே முடிந்தது,' என்று நகைமுகத்துடன் கூறியவாறு பத்து ரூபா நோட்டை எடுத்துக் கொடுப்பார்.

மற்றும், 'நான் பாரதியாருடன் வழிசெல்கிறவன். எனக்குத் திருடர்களின் தொல்லையே இராது. அச்சமும் இல்லை. வெட்கப்படவேண்டியதும் இல்லை,' என்றும் இனிமையுடன் கூறுவார். பாரதியார், 'அச்சா! அப்படிச் சொல்லப்பா! தங்கமே!' என்பார்.

சிலநாட்களில் அங்கே குழுமியிருக்கும் நண்பர்களுக்குச் சிற்றுண்டி வழங்க விரும்புவார் பாரதியார். அப்போது செட்டியார் அங்கே இருந்தால் தம்மிடம் உள்ள ஒரு செல்லாப் பணத்தைப் பாரதியார் எடுத்து நண்பர்களிடம் காண்பித்து, 'இது செல்லுமா?' என்பாராம். நண்பர்கள் பாரதியாரின் குறிப்பறிந்து 'செல்லும் செல்லாததற்குச் செட்டியார் இருக்கிறார்,' என்று செட்டியாரைச் சுட்டிக் காட்டுவார்களாம். செட்டியார் நகை முகத்துடன் மடியிலிருக்கும் பணத்தைக் கொடுப்பாராம்.

என்னே! 'வெல்லச்சு'வின் மேலான பண்பு.

பாரதியாருக்குச் சமயங்களிற் பொருள் முடை தீர்த்த நண்பர்களிற் சுந்தரேச ஐயரும் ஒருவர். அவர் எளியவரேயாயினும் மனைவியின் நகைகளை அடகு வைத்தேனும் பாரதியாருக்குக் கொடுப்பதில் விருப்பமுடையவர்.

பாரதியாரின் பொருணிலையை அறிவிக்கவே இந்தச் சான்றுகள் எடுத்துக்காட்டப்பெற்றன. பொருள் முடையிருப்பினும் பொருள் வந்தவுடன், 'ஓம்பாது உண்டு கூம்பாது வீசுவது'தான் அவருடைய இயற்கை. ஒருநாள் இருநூறு ரூபா கிடைத்தது. அன்றே அழிந்தது.

இத்தகைய வறிய நிலையில் இருப்பினும் அன்புடையார் கொடுப்பதையன்றி வீண் செருக்காளர் அளிப்பதை ஏலார். 'மோதி மிதித்துவிடு பாப்பா!—அவர் —முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா!' என்பார்.

### ஆடைக் கொடை

ஒருநாள் பாரதியார் வீட்டு வாயிலில் வந்த இரவலன் ஒருவனுக்கு இடையிலுள்ள ஆடையையும் சட்டையையும் தலைப்பாகையையும் பரிசாகக் கொடுத்தார். ஏழையெளியவரைக் கண்டால் இரங்கித் தம்மாலான ஆதரவு செய்வார். புதுவையில் இருக்கும் 'புஷ்' வண்டிக்காரர்களுக்குப் பாரதியாரைக் கண்டால் மிகவும் களிப்புண்டாகும். அவர் எங்காவது போக விரும்பி வெளிவந்தால் எவனாவது 'புஷ்' வண்டிக்காரன் வந்து ஏற்றிச்செல்வான். கூலி கொடுக்கவந்தால் வாங்கமாட்டான். 'எனக்கு ஏன் பணமும் காசும்,' எனப் பணிவுடன் பகர்வான். பாரதியார் அவன் குறிப்பறிந்து ஏதேனும் ஓராடையோ சட்டையோ கொடுப்பார். ஒருமுறை ஒரு சரிகை மேலாடை ஒரு நண்பர் கொடுத்தார். அது மறுநாள் 'புஷ்' வண்டிக்காரனுக்குப் போய்ச் சேர்ந்தது. 'அவனுக்குச் சரிகைத்துணி அணிய ஆர்வமிருக்கும். எவ்வாறு கிடைக்கும்?' என்றாராம்.

பாரதியாரின் வாழ்க்கையைப் பண்டைப்புலவர் பெருஞ்சித்திரனாரின் வாழ்க்கையுடன் ஒப்பிடலாம், அவரும் வறுமையோடு நட்புக்கொண்டவர். அவர் குடும்பத்தினர் கீரையைத் துவட்டியே பலநாட்கள் உண்டிருக்கின்றனர். அத்தகைய வறிய புலவர் குமணனிடம் யானைமீது பெரும்பொருள் கொண்டுவந்தார், மனைவியிடம் அவற்றைக் கொடுத்து, 'நாளைக்கு வேண்டும் என்று வைத்துக்கொள்ளாதே. உனக்கு முன் அளித்தவர்களுக்கும் உறவினர் நண்பர்களுக்கும் கொடு. என்னை வினவவேண்டாம். மனம்போலச் செலவு செய்' என்றாராம். பாரதியாரும் தமக்குக் கிடைத்த எதனையும் நாளைக்கு வேண்டுமென்று வைப்பதில்லை.

## பொன்னு—முருகேசம் பிள்ளை

பாரதியாரின் நண்பர்களிற் பொன்னு—முருகேசம் பிள்ளையும் ஒருவர். அவரும் அவர் குடும்பத்தாரும் பாரதியாருக்கு வேண்டுவன செய்வதில் விருப்பங் கொண்டவர்கள். பொன்னு முருகேசம் பிள்ளையவர்களின் மனைவியார் பாரதியாரின் அன்னைபோன்ற அன்புடையவர். நிலம் அதிரவும் நடவார். பொறுமை மிக்கவர். புன்முறுவல் பூத்த முகத்தினர். வெட்டிப்பேச்சை வெறுப்பவர். பாரதியாரிடம் அன்புகொண்டது அவருடைய இயற்கையெனவே இயம்பலாம். அந்த அம்மையார் இங்கிதம் அறிந்து யாவருக்கும் வேண்டுவன செய்வார். பாரதியாரிடம் நெருங்கிப் பேசினதும் இல்லை. நாட்டுப்பற்றோ, கவிதைச்சுவையோ, காவியக்கருத்தோ அவரைப் பாரதியாரிடம் அன்புகாட்டத் தூண்டியவை என்று சொல்லற்கியலாது. பெண்மையின் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம் அந்த அம்மையாரை.

பாரதியார் சிலநாட்கள் அங்கேயே தங்குவதும் உண்டு. காலையில் எழுந்தவுடன் பற்பொடியும் செம்பில் நீரும் அவருக்கு அருகில் இருக்கும். பல் தேய்த்து முகங் கழுவியதும் காலைச் சிற்றுண்டியுங் காப்பியும் வந்துவிடும். குழவியின் பசியறிந்து பண்புடன் பரிந்தூட்டும் அன்னையனையர் அந்த அம்மையார் என்பது பொருந்தும்.

பாரதியார் இருக்கும் அறை எப்போதும் குப்பை கூளங்கள் நிறைந்து கிடக்கும். பாரதியார் வெளியே சென்றிருக்கும் காலம் நோக்கி அந்த அம்மையார் அந்த அறையைப் பெருக்கி ஒழுங்கு செய்துவைப்பார். பாரதியார் பாடத் தொடங்கினுல், இரண்டுமணி நேரமாவது

செல்லும் முடிவதற்கு. இரவு நேரமானால், அதுவரையில் அண்டை அயலிலுள்ளவர்களுக்குத் தூக்கங் கெடும். எனினும் எவரும் குறைகூறமாட்டார்கள்.

பிள்ளையவர்களின் மக்கள் இருவர். இராஜாபகதூர், கனகராஜா என்னும் பெயரினர். அவர்களில் ராஜா பகதூர் பாரதியின் அன்பனாகிவிட்டார். பிள்ளையவர் களின் தங்கை மகள் ஒரு சிறுமி பதினொரு வயது உடை யவள் இருந்தாள். அச்சிறுமி பாரதியாரிடம் எப்போ தும் இருந்து அன்புத் தொண்டு செய்வாள்.

இவ்வாறு அந்தக் குடும்பமே பாரதியாரின் அன்பைக் கொள்ளைகொண்டது.

### அம்மாக்கண்ணம்மாள்

பாரதியார் வீட்டு வேலைக்காரி அம்மாக்கண்ணு என்னும் பெயரினள். பொதுவாக வேலைக்காரிகள் தங் கள் தலைவர்களிடம் உள்ளன்புடன் இல்லாவிட்டாலும் வெறுப்பில்லாமல் இருப்பதில்லை. ஆனால், இந்த வேலைக் காரி அந்தக் குழுவிலிருந்தே வேறுபட்டவள். அவளுக் குப் பாரதியாரிடம் சிறந்த செல்வாக்குண்டு. அவள் இயற்கையிலே உண்மையும் நல்லொழுக்கமும் உடை யவள். வறுமையில் செம்மையுடைய அவளுக்குப் பார தியார் கட்டுப்படுவதுபோல வேறெவருக்குங் கட்டுப்பட மாட்டார் என்றும் இயம்பலாம்.

ஒருநாள் ஏதோ மனவெறுப்புப் பாரதியாருக்கு நேர்ந்தது. 'இடுக்கண் வருங்கால் நகு'ம் அவருக்கும் அதைத் தடுக்கமுடியவில்லைபோலும். மற்றும், சிறிது முன்கோபம் உடையவர் பாரதியார். எப்படியோ வெறுப்பு நேர்ந்துவிட்டது. சீற்றம் பொங்கப் புகை வண்டி நிலையத்திற்குப் போய்விட்டார்.

பாரதியார் சீறினால் எவரும் தடுக்கமுடியாது. அவ் ராகவே தணிந்து வரும் வரையில் ஏங்கிக் கிடக்கவேண் டியதுதான். நண்பர்கள் பாரதியார் சென்றதை உணர்ந் தனர். அப்போது அம்மாக்கண்ணு வீட்டிலிருந்திருந் தால் அவரை வெளியே விட்டிருக்கமாட்டாள். எங்ஙன மேனும் தடுக்க அவளால் இயலும். சென்றபிறகே அவ ளும் உணர்ந்தாள். எவருக்கும் அவர் புகைவண்டி நிலையம் சென்றது தெரியாது.

இப்போது பாரதிதாசன் எனப்படும் புரட்சிக்கவிஞர் கனக-சுப்புரத்தினம் எங்ஙனமோ அறிந்து பாரதியாரை நெருங்கினார். கண்களில் அனல் கக்க உலவிக்கொண் டிருந்த பாரதியார் சுப்புரத்தினத்தைப் பார்த்ததும் முக மலர்ச்சியடைந்தார். பாரதிதாசன் நன்றாகப் பாடுவார். சீர்திருத்த நோக்கத்தினரான பாரதியாரிடம் நட்புக் கொண்டு பாரதியாரின் உள்ளத்தைக் கவர்ந்திருந்தார். பாரதியாரை எப்படியோ மனந் தெளியச்செய்து அழைத் துக்கொண்டு ('புஷ்வண்டியில்')வந்தார்.

பாரதியார் தம் வீட்டுக்கு வர ஒப்பவில்லை. வேறு தெருக்களின் வழியாகப் பாரதிதாசன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தது வண்டி. வழியிலே அம்மாக்கண்ணு அம்மாள் நின்றுகொண்டிருந்தாள். அவள் கையில் சுண்டல் முதலிய தின்பண்டங்கள் இருந்தன. அன்று பாரதியார் பட்டினியாக இருந்தார். ஆகவே, 'பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து'வேலைக்காரி நின்றாள் போலும். அவளையும் சிற்றுண்டியையும் கண்டதும் அவருடைய சீற்றம் 'நீர் கிழிய எய்த வடுப்போல்' மாறியது. சிற்றுண்டியை வயிற்றில் தள்ளியதும் மகிழ்ச்சி வந்துவிட்டது. பாரதிதாசன் அவ் வுணவைத்

'தேவாமிர்தம்' எனப் புகழ்ந்தாராம். தேவாமிர்தம் என்றவுடன் தேவலோகமாகவே மண்ணுலகை மதித்து விட்டார் பாரதியார். வண்டிக்காரனை, 'ஓட்டடா ரதத்தை' என்றாராம். வண்டி பாரதியார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தது.

இங்குப் பாரதியாரின் குழந்தைத்தன்மையைப் புகழ்வதா, வேலைக்காரியின் வேலைத்திறத்தைப் புகழ்வதா என்பது தெரியவில்லை. எனினும், பாரதியாரின் சீற்றம் நிலைத்திராது என்பதையும், வேலைக்காரி உண்மை யன்புடையவள் என்பதையும் நன்குணரலாம்.

---

## ௫. மடமைத்தீர்த்த மாண்பு

*சுரேந்திரநாத ஆரியா*

அக்காலத்தில் நடந்த உரிமையாட்சி இயக்கத்தில் ஈடுபட்டவர்களிற் சுரேந்திரநாத ஆரியா என்பவர் ஒருவர். இவர் தெலுங்கர்; திண்ணிய குள்ளமான யாக்கையை உடையவர். இவருடைய சொற்பொழிவு அனல் கக்கும். அடிமை வாழ்வை இகழ்ந்து கூறுவது அழகாயிருக்கும். "மீசையிருக்கிறதாம் மீசை! வரால் மீனுக்கும் மீசையிருக்கிறது! அது எளிதாக மக்களிடம் அகப்பட்டு மாள்கிறது! நாமும் ஆங்கிலேயரிடம் உரிமையை அகப்படுத்தி மாள்கிறோம். மீசையுடைய ஆண்மக்களால் இந்த நாட்டுக்குப் பயனென்ன?" என்று கூறுவாராம். திருவல்லிக்கேணி கடற்கரையிலே இவருடைய சொற்பொழிவைக்கேட்க மக்கள் திரண்டு வருவார்கள்.

இவர் ஆறாண்டுகள் கடுங்காவற் சிறையிலே நைந்து வெளிவந்தார். இரண்டு திங்கள் கழித்துப் புதுவை வந்து பாரதியாரைக் கண்டார். இருவரும் இணைபிரியா நண்பர்கள். பாரதியாரைக் கண்டவுடன் அணைகடந்த வெள்ளமெனப் பாய்ந்து இறுகத் தழுவிக்கொண்டார். இரண்டொரு விநாடிகள் இருவரும் மெய்ம்மறந்தனர். கண்கலங்கினர். பிரிந்த நண்பரின் கூடிய மகிழ்ச்சி!

'பாரதி! உன்னைக்காண என் உள்ளந் துடித்தது! எங்கே காணமுடியாமற் போய்விடுமோ எனக் கலங்கினேன். நான் விடுதலையடைந்து இரண்டு திங்கள்வரை எங்கெங்கோ அலைந்தேன். எப்படியோ கண்டுபிடித்தேன். நீ நலமா?'

'ஆரியா! சிறைவாழ்வு எப்படி? உன் உடலே வாடிவிட்டதே! நீயே இங்ஙனம் இளைத்தால் மற்றவர்கள்

வாடாமலிருப்பாரோ? பல்விளக்கு, ஏதாவது சாப்பிட்டு விட்டுப் பேசலாம்.'

சுரேந்திரர் வந்தநேரம் காலைநேரம். பல்விளக்கிக் கொண்டு சிற்றுண்டியை இருவரும் முடித்துக்கொண்டு, பிறகு பேசத் தொடங்கினர்.

'பாரதி! உனக்குத்தெரியுமா? நான் கிறித்தவனாகி விட்டேன். சிறையிலும் வெளியிலும் பாதிரி நண்பர்கள் எனக்குப் பரிவுடன் செய்த நன்றியை நினைக்குந்தோறும் உள்ளம் நெகிழ்கிறது!'

பாரதியார் உள்ளம் உடைந்தது.

'இவ்வாறு நேரும் என நான் ஐயுற்றேன். நீ என் செய்வாய்? இந்து சமூகம்—உயிரற்ற சமூகம் இருக்கிற நிலை இது?'

'சிறையிலிருந்து வெளிவந்த என்னைப்பார்த்து வாய்ச்சொல் வழங்கவும் ஒருவரும் முன்வரவில்லையே! எங்கு நோக்கினும் வெறுப்பும் அச்சமும் வெளியிட்டிருந் தன! பாதிரிமார்களே என்னை வரவேற்று வேண்டியன செய்தார்கள். சொற்பொழிவைக் கேட்டுக் கைதட்டு வதும் வீட்டுக்குப் போனவுடன் அச்சப்போர்வையில் நுழைவதுந்தானே இந்துக்களின் பண்பு! இத்தகைய இந்துக் குழுவிலே வெந்து நீறாக நான் விரும்பவில்லை! உனக்கு நான் கிறித்தவனானது பிடிக்காதுபோ லிருக் கிறது!'

பாரதியார் திகைத்துவிட்டார். சிறிதுநேரம் வரை யில் வாளாவிருந்தார். பிறகு கூறினார்:

மனக்கசப்பு வந்துவிட்டதென்று நீ இந்துமதத்தை விட்டுச் சென்றுவிட்டாய். உன்னைப்போல அறிவும்

ஆற்றலும் நாட்டுப்பற்றும் நிறைந்த ஒவ்வொருவனும் இந்துமதத்தைவிட்டுப் போய்விட்டால், இந்துமதம் என்னாகும்! ஊழலிருந்தால் அதனை நீக்குவதுதான் செய்ய வேண்டுவது. இனி நீ பாதிரிமாரின் ஆட்சிக்குக் கட்டுப்படவேண்டியவன். உன் திறமையை அவர்கள் தங்கள் சமயச் சொற்பொழிவுக்குப் பயன்படுத்திக்கொள்வார்கள். இனி நான் என்ன சொல்லக் கிடக்கிறது?

இவ்வாறு கூறும்போது பாரதியாரின் கண்களிலும் ஆரியாவின் கண்களிலும் நீர் பெருகியது.

"பாரதி! என்செய்வது? நான் அமெரிக்காவுக்குச் செல்லவேண்டும். அவர்கள் (பாதிரிமார்கள்) எனக்கு ஆதரவு செய்வதாகக் கூறுகின்றனர். அதை ஏற்பது தகுதியெனவே எண்ணுகின்றேன். இங்கிருந்து என் செய்வேன்? அமெரிக்காவுக்குப் போவதற்குமுன் உன்னைப் பார்க்கவே ஓடிவந்தேன். நீ ஒரு சிறந்த கவிஞன். உன்னைப்போலிருந்தாலும் இங்கே இருந்து பணி செய்யலாம்."

பாரதியார் துக்கத்தாற் புழுங்கினார்.

"உன் துணிவை நான் மாற்ற விரும்பவில்லை. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்பது உண்மையே. எனினும், எதற்கும் அளவில்லையா? இந்து சமூகத்தில் நாளாவட்டத்தில் எவ்வளவோ ஊழல்களும் கறைகளும் ஏறியிருக்கலாம். அதற்காக இந்துமதத்தையே நாம் புறக்கணிப்பதா? நாம் அதை மாற்றப் பாடுபடவேண்டும். அன்றிப் பிற மதத்திலே அடைக்கலமாவது எனக்கு விளங்கவில்லை. உன்னைப்போன்ற அறிஞர்கள் இந்து மதத்தைத் தூய்மை செய்தல்வேண்டும். அவ்வாறின்றி

நீ கிறித்தவனானது பெருந்தவறு என்பதே என் எண்ணம். உனக்கு நான் அறிவு புகட்டுவதாக எண்ணி விடாதே. எனக்குத் தோன்றியதை எடுத்தியம்பினேன். மற்றொன்று : அமெரிக்காவிற்குச் செல்லும் இந்திய இளைஞர் வெள்ளை மாதரை மணந்துகொள்வது என்பது இக்கால வழக்கமாய்விட்டது. உரிமைபெறாத நாம் அவ்வாறு செய்வது நன்றாயிராது. கட்டுப்பாடு குலைந்து விடும். நன்று, சென்றுவா; நாட்டைமட்டும் மறவாதே."

ஆரியா கலங்கிய உள்ளத்துடன் விடைபெற்றுச் சென்றார்.

பாரதியாரின் மனம் பட்டபாட்டை என்னென்பது?

"நாட்டுக்காக உழைக்க முன்வருவோரை இந்நாடு காப்பாற்றாமல் இங்ஙனம் விட்டால் இதன் நிலை என்னாதும்? தூயவனை சுரேந்திரநாதன் வெறுக்கும்படி செய்ததே இந்தச் சமூகம்!" என்று வெதும்பினார்.

சுரேந்திரநாதர் அமெரிக்காவிற்குச்சென்று 'தத்துவ டாக்டர்' பட்டம்பெற்றுத் திரும்பினார். பிறகு, தன் மான இயக்கத்திலே ஈடுபட்டுப் பணிபுரிந்தார்.

### பூணூல்

தீண்டாதார் குலத்திற் கனகலிங்கம் என ஒரு பையன் இருந்தான். அவனுக்குப் பூணூல் போட்டுக் குல இழிவிலிருந்து மாற்றி ஏற்றம்புரிய எண்ணினார் பாரதியார். அக்காலத்திலே தீண்டாமை மிகுந்திருந்த தன்றோ? ஒடுக்கப்பட்டுத் தாழ்குலமென மக்களாலே கூறப்பட்ட ஒரு வகுப்பிலுள்ளவனைக் கைதூக்கிவிட விரும்பின பாரதியாரின் சமநோக்கை என்னென்பது? அவர் எப்போதே பூணூலை அறுத்தெறிந்து வகுப்புக்

கட்டுப்பாட்டை உடைத்தெறிந்தவர். அத்தகையவர் ஒரு பையனுக்குப் பூணூல் அணிவிக்க விரும்பினதேன் எனில், தாழ்த்தப்பட்ட அவன் முன்னேற்றத்தை விரும்பியே என்னலாம்.

ஒருநாட் காலையில் எட்டு மணிக்குப் பாரதியார் வீட்டிலே கூடத்திற் பல பெரியார்கள் குழுமினர். பாரதியார் கனகலிங்கத்தை உட்காரவைத்துத் தாமும் உட்கார்ந்தார். சிலர் மறையை ஓதினர், தீயின் முன்னிலையிலே பாரதியார் தாமும் பூணூல் அணிந்து கனகலிங்கத்திற்கும் பூணூல் அணிவித்துக் 'காயத்திரி' மறை சொல்லிக்கொடுத்தார்.

கனகலிங்கத்தைப் பார்த்து, "இன்றையிலிருந்து பிராமணன். எதற்கும் யாருக்கும் அஞ்சாதே. யாராவது வினவினால், 'பாரதிதான் பூணூல் அணிவித்தான்' என அஞ்சாமல் விடைகூறு. எதுநேர்ந்தாலும் இப்பூணூலை எடாதே" என்று உறுதியுரைத்து விடைகொடுத்தார்.

பிறகு, ஒருவரைக் கூப்பிட்டுக் கனகலிங்கத்தை அவன் வீட்டிற் கொண்டுபோய் விட்டுவரச்சொன்னார்.

பிறகு, "நாடறிந்த பார்ப்பானுக்குப் பூணூல் வேண்டா. புதுப்பார்ப்பான் கனகலிங்கத்திற்குப் பூணூல் தேவை. அவனுக்குக் காயத்திரி சொல்லிக்கொடுத்ததற்காக நான் பூணூல் அணிந்துகொண்டேன். இப்போது கழற்றிவிடுகிறேன்," என்று கூறிக் கழற்றி விட்டார்.

சாதி வரம்பை அழிக்க இதுமட்டுமா செய்தார்? வள்ளுவனோடு உணவருந்தியிருக்கிறார்.

**பேயோட்டுதல்**

பாரதியாரின் நண்பர்களிற் சுப்பையா என்னும் தட்டார் ஒருவர் இருந்தார். அவருடைய பையன் தெளிவின்றி ஒரு வகையாக இருந்தான். அவனுக்குப் பேய் பிடித்திருக்கிறதென்று பலர் கூறினர். சுப்பையா மனங் கலங்கினார். தெரிந்த மந்திரமுந் தந்திரமும் புரிந்தார். மருத்துவமும் பார்த்தார். மணியும், மந்திரமும், மருந்தும் பணத்தைக் கரைத்தனவே ஒழிய பையனின் மயக்கத்தைக் கரைத்தில.

அவர் வாடிப்போய்ப் பாரதியாரிடம் முறையிட்டார். 'ஏதாவது வழிதெரிந்தாற் சொல்லுங்கள்,' என்றார்.

பாரதியார், "நண்பனே; பையனை மூலையில் அடைத்து வைக்காதீர். காலை மாலைகளிற் கடற்கரைக்காவது பொழில்களுக்காவது அழைத்துச்செல்ல வேண்டும். பையன் உள்ளம் மகிழ நாம் நடந்துகொள்ள வேண்டும். நீர் மந்திர தந்திரவாதிகளால் அவனை மருட்டிவிட்டீர்," என்றார்.

சுப்பையா வருத்தத்துடன், "நான் சொல்வதற்கெல்லாம் அவன் மாறு புரிகிறான். என் வீட்டில் அவனுக்குச் சிறிதும் அச்சமேயில்லை. காலையிலும் மாலையிலும் தங்களிடம் அழைத்து வருகிறேன். தாங்களே அவனைத் தெளிவிக்கவேண்டும்," என்று வேண்டினார்.

"அப்படியே செய்க. ஏதாவது நலமுண்டாகிறதா எனப் பார்ப்போம்," என்றார் பாரதியார்.

தட்டார் சென்றுவிட்டார்.

மறுநாட் காலையில் மயங்கிய மகனுடன் வந்தார் சுப்பையா. பாரதியார் 'சக்தி' வழிபாடுடையவர்.

அவர் அப் பையனுக்குச் 'சக்தி'யை வழிபட்டுத் திரு நீறும், குங்குமமும் அணிவித்தார். மாலையிலும் அவ்வாறே செய்தார். மூன்றுநாட்கள் கழிந்தன. சிறுவனுடைய ஆர்ப்பாட்டம் சிறிது அடங்கியது. தெளிவென்பதுதான் இல்லை. சுப்பையா அழமாட்டாக் குறையாக, "இப்படியெல்லாஞ் செய்தாற் பேய் போகாது. 'போ, போ, போ' என்று வெருட்டினால் மட்டும் போகும்" என்றார்.

பாரதியார் நகைத்தார். "பேயென்று ஒன்று உருவுடன் உங்கள் மகன்மேல் ஏறி உட்கார்ந்திருக்கிறதா?" என்று கிண்டல் செய்தார்.

'ஆமாம்; பேயில்லாமற் பின் என்னவாம்?' என்றார் அந்த அன்பர்.

பாரதியார் வியந்தார்! "என்ன நண்பரே! பழக்கத்திலே படிந்து இங்ஙனம் பகர்கிறீரே! 'சக்தி' வழிபாட்டினாற் போகாத பேய், 'போ போ' என்றாற் போய் விடுமா? நன்று! என்ன சொல்லி ஓட்டவேண்டும்?"

'நீங்கள் என்ன சொல்லி ஓட்டினாலும் ஓடிவிடும்.'

'அப்படியா? இதோ ஓட்டுகிறேன்.'

நம்நாட்டின் அச்சநிலை கண்டு வருந்திய நிலையிலே பாரதியார் ஒரு பாட்டுப் பாடியிருந்தார். அதை அப்போது பாடினார்.

வலிமையற்ற தோளினாய்! போ, போ, போ!
மார்பிலே ஒடுங்கினாய் போ, போ, போ!
பொலிவிலா முகத்தினாய்! போ, போ, போ!
பொறியிழந்த விழியினாய்! போ, போ, போ!

ஒலியிழந்த குரலினாய் ! போ, போ, போ !
ஒளியிழந்த மேனியாய் ! போ, போ, போ !
கிலிபிடித்த நெஞ்சினாய் ! போ, போ, போ !
கீழ்மை யென்றும் வேண்டுவாய் ! போ, போ, போ!

இன்றுபார தத்திடை நாய்போல
ஏற்றமின்றி வாழுவாய் ! போ, போ, போ !
நன்றுகூறி லஞ்சுவாய் ! போ, போ, போ !
நாணிலாது கெஞ்சுவாய் ! போ, போ, போ !

சென்றுபோன மெய்யெலாம் பொய்யாகச்
சிந்தைகொண்டு போற்றுவாய் ! போ, போ, போ !
வென்றுநிற்கும் மெய்யெலாம் பொய்யாக
விழிமயங்கி நோக்குவாய் ! போ, போ, போ !

*சுப்பையாவின் மகன் இதைக் கேட்டுக்கொண்டிருந்தவன் கூக்குரலிட்டுக்கொண்டு, 'போகிறேன்' என்று கத்தியவாறு கீழே விழுந்தான். பாரதியார் அவனை எடுத்து மடியிற் கிடத்திக்கொண்டு தெளிவித்தார். பிறகு, அன்பும் நலமும் துணிவும் கிளர்ச்சியும் உண்டாக்கத்தக்க மொழிகளால் தேற்றினார். பத்து நாட்களிற் பையன் தெளிந்துவிட்டான். சுப்பையா மனம் அமைதியடைந்தது. "சாமி! பாடும் மாட்டுக்குப் பாடிக் கறக்கவேண்டும்; ஆடும் மாட்டுக்கு ஆடிக் கறக்க வேண்டும். பேயைக் கும்பிட்டுப் பாடிப் போற்றினாற் போகாது. அடித்து விரட்டவேண்டும்," என்றார்.*

*பாரதியும், 'ஆம், நண்பரே!' என்றுதரவு கூறினார். அவர் போனபிறகு, 'நம்பிக்கையே கைகண்ட மருந்து. சுப்பையாவின் மகனுக்கு என்னிடம் இருந்த நம்பிக்கையினாலேயே நோய் தீர்ந்தது. அதேபோல், நம்நாட்டு நோயும் நீங்கவேண்டும்,' என்று நண்பர்களிடம் நவின்றார்.*

### பித்த முறிவு

சிறிது மயக்கம் (பைத்தியம்) பிடித்த ஒரு சிறுவனைப் பாரதியார் பார்த்தார். அவன் வாயால் ஏதும் பிதற்றுவதில்லை; பேச்சவிந்தே இருப்பான். அது ஒருவகையான மயக்கம். அதனைப் போக்குவதற்கு முயற்சித்தார் பாரதியார். நண்பர்கள் நகைத்தார்கள்.

'மயக்கம் மனக்கோளாறுதானே? பார்த்துக்கொள்ளலாம்,' என்றார் பாரதியார்.

அப்பையனைப் பாரதியார் எப்போதும் தம்முடனேயே வைத்துக்கொண்டார். அவர் தம் கைகளால் அவனைத் தடவிக்கொடுப்பார். பழங்களை உரித்து ஊட்டுவார். இரவில் தம் அருகிலேயே படுக்கவைப்பார். 'கண்ணு! ராஜா!' என்று அழைப்பார்.

அப்போதெல்லாம் பாரதியாரின் நண்பர்கள் இது 'குதிரைக்கொம்பு' என்று நகையாடாமல் இருப்பதில்லை. பாரதியாரும் மனச்சோர்வடையவில்லை.

ஒரு திங்கள்வரையில் இத்தகைய மருத்துவம் நடந்தது. மனமயக்கம் சிறிது சிறிதாக விலகிப் பையன் தெளிவாகப் பேசவும் பழகவும் தொடங்கினான். பாரதியார் களிப்புற்றார். நண்பர்கள் வியப்பும் வெட்கமும் அடைந்தனர்.

### கோவிந்தா, கோவிந்தா!

புதுவை ஈசுவரன் தருமராசா கோயில் தெருவில் ஒரு அறவி (சத்திரம்) இருக்கிறது. அங்கே ஒரு முறை கதையொன்று நடந்துகொண்டிருந்தது. கதை செய்யும் பாகவதருக்குத் திறமை போதாது. கதை கேட்க வந்தவர்கள் தங்களுக்குள் பேசத் தொடங்கிவிடுவார்கள்.

கூச்சல் கிளம்பிவிடும். அதனை அடக்கப் பாகவதர் ஒரு வழிதான் கண்டுபிடித்திருந்தார். அது 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்.' ஆரவாரத்தை அடக்க அவர், 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்' என்றவுடன் எல்லோரும் 'கோவிந்தா, கோவிந்தா!' என்பார்கள். பிறகு, சிறிது கதை நடக்கும். பிறகு, மறுபடியும் ஆரவாரம்! பிறகு, கோவிந்தநாம சங்கீர்த்தனந்தான்!

பாரதியார் ஒருநாள் கதை கேட்கப் போயிருந்தார். அவருக்கு அங்கே இருக்கப் பிடிக்கவில்லை. வெளியே வந்துவிட்டார். அந்தக் கதையை அடக்க ஒரு வழி செய்ய நினைத்தார். பொன்னு - முருகேசம் பிள்ளையவர்களின் வேலைக்காரன் ஒருவன் கோவிந்தன் என்பவன் இருந்தான். அவனைக் கூப்பிட்டு அவன் காதில் அவ்வழியைக் கூறினார். அவன் மகிழ்வுடன் ஒப்புக்கொண்டான். அறவியினுள் நுழைந்தான்.

கதையின் இடையே பேச்சையடக்கக் 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்' என்றார் பாகவதர். எல்லோரும் 'கோவிந்தா! கோவிந்தா!!' என்றனர். 'ஏன்?' என்று ஓடினான் கோவிந்தன். 'அடிக்கடி கூப்பிடுகிறீர்களே!' என்றான். கதை கேட்கவந்தவர்கள் எல்லோரும் கொல்லென்று நகைத்தார்கள். பாகவதர் வெட்கித் தம்கடையை (கதையை)க் கட்டிவிட்டார்.

### இயற்கையின் வெறி

பாரதியார் காலையிற் கதிரவன் வெளிவரும்போது கடற்கரையிலே அமர்ந்து அக்காட்சியைக் கண்டு மகிழ்வார். மாலையிலும் அவ்வாறே ஏதாவதொரு பொழிலுக்குச் செல்வார். கடலலை முழக்கிலும், கதிரவன் தன் கதிர்களாற் கடலலையில் தீட்டும் ஓவியத்தின் வனப்பி

லும், பொழில்களிற் பலவகை நறுமணமலர்களின் காட்சியிலும், பறவைகளின் இன்னிசையிலும் பாரதியார் தம் உள்ளத்தைப் பறிகொடுப்பார்.

உரிமை வேட்கையற்ற மக்களிடம் பழகுவதினும் உரிமையுடன் உலவவும் பழகவும் பைம்பொழிலிலும் நீலத்திரைக் கடலிலும் பழகவும் ஆவல் கொண்டார் பாரதியார். 'மானமற்ற முகத்தைப் பார்ப்பது எப்படி?' என்று நைவார் அவர்.

வெல்லச்சுக் கிருஷ்ணசாமி செட்டியார் என்று ஒருவர் முன்னரே நமக்கு அறிமுகமாகியிருக்கிறார். அவருடைய தோட்டந்தான் இவருக்குப் புகலிடம் சில நாட்களிற் புதுவைக்கடுத்த வில்லியனூர்க்குப் போய்விடுவார். அங்கே சென்று மரங்களையும் செடிகொடிகளையும் பொய்கையையும் சின்னஞ்சிறு பறவைகளையும் பார்த்தவுடனே அவருடைய கவலைகள் கரந்துவிடும். 'காக்கை குருவி எங்கள் சாதி' என்று பாடினவரல்லவா? அந்த இடமே நண்பர்கள் நிறைந்த உறையுளாக அவருள்ளத்திலே படியும். அங்கேதான் அவருடைய புதுமைக் கவிகள் பிறக்கும். பாரதியார் நல்ல குரலும் இசைப் பயிற்சியும் உடையவர். ஆகையால், புதுக் கவிகளெல்லாம் அவருடைய வாய்வழியாகவே வந்து நண்பருடைய உள்ளத்திலே அமுதத்தைப் பொழியும்.

அவருடைய வாய் 'ச - ரி - க - ம' என்று இசைக்கத் தொடங்கிவிட்டால் நண்பர்கள் அமைதியாய் விடுவார்கள். பாரதியார் மரத்தை உற்று நோக்குவார்; பொய்கையைப் பார்ப்பார்; வானத்தை மெய்ம்மறந்து நோக்குவார். காலால் தாளம் போடுவார். 'சொல் ஆழி வெண் சங்கே!' என்பார். தாயுமானவர் கண்ணிகளில் ஒன்று வரும்.

மறுபடி அமைதி. மறுபடி 'சரிகம'. இவற்றுக்கெல்லாம் இறுதியிலே பாட்டுக் கிளம்பிவிடும். 'நோக்குந் திசையெல்லாம்' அவரேயாகி, 'நோக்க நோக்கக் களியாட்டம்' உண்டாய்விடும்.

முத்தியாலுப்பேட்டை கிருஷ்ணசாமிச் செட்டியாரின் தோட்டத்திலேதான் குயில்பாட்டு பிறந்தது. குருவிப் பாட்டுத்தான் பாரதியாரின் கற்பனையின் உயர்ந்த உயிரோவியம். இயற்கை பாரதியாரின் கண்களின் வழியாக நரம்பிடையே பரவிப் பாய்ந்து உடலையும் உள்ளத்தையும் கவிமயமாக ஆக்கிவிடும். அவர் கவிதை அவருடைய உள்ளத்தையே அன்றி உடலையும் களிநடம்புரியச் செய்துவிடும் எனின், அவருடைய கவிதையை அவர் வாயால் நேரிற் கேட்கும் அன்பர்களின் நிலை யெங்ஙனமாம்! பாட்டு முடிந்தவுடன் சோர்ந்து படுத்துவிடுவார். சிறிது கழித்து எழுந்தாற் பாரதியாரின் தோற்றம் அமைதியாக இருக்கும்.

ஒவ்வொருநாளும் மாலை ஆறு மணிக்குப் பாரதியார் அரவிந்தர் அகத்துச் சென்றுவிடுவார். வேதாந்த ஆராய்ச்சியில் இருவரும் ஈடுபடுவார்கள். உணவும் அரவிந்தர் வீட்டுக்குப் போய்விடும். ஒருநாள் மாலை அவ்வாறே போகத்தொடங்கியதும் மனைவி செல்லம்மாளும் பெண்கள் தங்கமும் சகுந்தலாவும் அவரைத் தடை செய்தார்கள். அன்று மாலை காற்றும் மழையுமாக வரும்போலிருந்தது.

'இன்று போகாவிட்டால் என்ன? இடியும் மழையும் காற்றுமாகத் தொடங்குகிறதே!' என்று அவர்கள் தடுத்துவிட்டார்கள். பாரதியாரும் வானமிருந்த நிலை கருதி அவர்கள் தடைக்குக் கட்டுப்பட்டு நின்றுவிட்டார்.

அன்றுதான் எதிர் வீட்டிலிருந்து இவர்கள் இருக்கும் வீட்டிற்குக் குடிவந்தார்கள்.

பாரதியாரின் மனம் இருப்புக் கொள்ளாமல் உழன்றது. அவரும் உலவிக்கொண்டே அமைதியற்றிருந்தார். உணவினும் ஊக்கங் காட்டவில்லை. ஒன்பது மணியாயிற்று. காற்றுச் சீறியெழுந்தது. சீற்றமூட்டப்பட்ட சிங்கமென முழங்கியது; பெருமழை கொட்டியது. மின்னல் கண்ணைப் பறித்தது; வாளென விதிர்த்தது. இடியோ, 'படார், படார்!' என அதிர்ந்தது. உயிர்கள் நடுங்கின. சால முதியவர்களும் அத்துணையளவிற் கண்டதில்லையெனக் கலங்கினர்.

அரவிந்தர் வீட்டுக்குப் போகாமலிருந்ததே நன்றெனப் பாரதியார் நவின்றார். 'இந்த இயற்கையின் வெறி எவ்வளவு தொலைவிற்குப் போகுமோ? நாம் ஒன்றாயிருப்பது மனத்திற்கு அமைதியை அளிக்கிறது,' என்றார்.

பெருங்காற்றினால் புதுவையின் வளமிகுந்த தென்னைகளெல்லாம் 'சடசட'வெனச் சாய்ந்தன. இவர்கள்முன் குடியிருந்த எதிர்வீட்டுத் தென்னைமரங்கள் சாய்ந்து மாடியின் ஒரு பகுதி இடிந்தது. மின்சாரக் கம்பிகள் அறுந்தன; தந்திமரங்கள் சாய்ந்தன; நகரெங்கும் இருள் மூடியது. எங்கும் கூக்குரல் கிளம்பியது. சூறாவளியிலே இவர்கள் குடியிருக்கும் வீட்டுச் சாளரக் கதவுகள் பெயர்ந்து விழுந்தன. சாளரங்களிலிருந்த கண்ணாடிகள் துகளாயின. யானைத் துதிக்கை போல மழைநீர் உள்ளே பாய்ந்தது. விளக்கும் அவிந்தது. பாரதியார் தட்டுத் தடுமாறி விளக்கையேற்றி மறைவில் வைத்தார். எல்லோரும் ஒருங்கே அமர்ந்து கலங்கினர். பாரதியார் 'நாங்கள் இன்று வேதத்திற் காற்றைப்பற்றியே படிக்க

இருந்தோம். கண்கூடாக இப்போது காற்றின் பெருவலி கண்டேன்,' என்றார். அவருள்ளம் களிவெறிகொண்டது. எழுந்தார், காற்றையும் மழையையும் பாடவும் ஆடவும் தொடங்கிவிட்டார். காற்று வெளியே 'கூகூ' வெனக் கூவிற்று. பாரதியார் வீட்டுக்குள்ளே வெடிக்குங் குரலிற் பாடினார்.

திக்குகள் எட்டுஞ் சிதறி—தக்கத்
 தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தித்தோம்
பக்க மலைக ளுடைந்து—வெள்ளம்
 பாயுது பாயுது பாயுது தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம்—அண்டம்
 சாயுது சாயுது சாயுது பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று—தக்கத்
 தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தத்தோம்.

இவ்வாறே 'மின்னல் வெட்டி இடிக்குது' 'வானம் தாளம் கொட்டிக் கனைக்குது' 'அண்டங் குலுங்குது' என்றும், 'காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டோம்' என்றும் பாடிக் களித்தார். உலகம் நடுங்கும்போது பாரதி பாடிக் குதித்தார்.

காலை ஆறு மணிக்குப் புயற்காற்றும் மழையும் ஓய்ந்தன. தமிழ்நாடு முழுதும் வெள்ளப் பெருக்கு. உடைத்துக்கொள்ளாத ஏரிகளில்லை. நாடெல்லாம் காடாக மரங்கள் சாய்ந்தன. புதுவை கடற்கரை நகரம். ஓதியஞ்சாலை என்ற தோட்டத்திலிருந்த அழகிய மரங்கள் சாய்ந்தன; கட்டடங்கள் சரிந்தன; கூரைகள் கூடாரம்போல் உட்கார்ந்துவிட்டன. நகரம் நரகமாகத் தோற்றமளித்தது. எனினும், முத்தியாலுப்பேட்டை கிருஷ்ணசாமி செட்டியாரின் தோட்டம் மட்டும் எவ்

வகைக் கெடுதலுமின்றித் தப்பியதாம். பாரதியாரின் இயற்கைக் கருவூலம் என எண்ணி இயற்கையன்னை விட்டிருக்க வேண்டும்.

காலை ஆறுமணிக்கே பாரதியார் தம் மகள் தங்கம் மாளுடன் நண்பர்கள் வீட்டுக்கெல்லாம் போய் நலம் உசாவி வந்தார். பொன்னுமுருகேசம் பிள்ளையவர் களின் வீட்டில் ஏதும் கோளாறில்லை. வ. வே, சு. ஐயர் வீட்டில் ஒழுக்கு; விடியும் வரையில் தண்ணீர் இறைக் கும் வேலை ஐயருக்கு. அரவிந்தரின் வீட்டில் அவர் மனைவியாரின் புகைப்படம் வீழ்ந்து தூளாகியது. அரவிந்தரோ யோகத்திலிருந்து விடுபடவில்லை கனக சுப்புரத்தினம், தாம் புயற்காற்றில் அகப்பட்டு வருந்திய தாகக் கூறினாராம்.

பாரதியார் வீட்டுக்கு வந்த பிறகு, 'காற்றடிக்குது கடல் குமுறுது கண்ணை விழிப்பாய் நாயகமே!' என்ற பாட்டைப் பாடினார்.

### ஒற்றர் தொல்லை

மாணிக்டோலா வெடிகுண்டு வழக்கில் எதிரியா யிருந்து சிறைப்பட்டு விடுதலையடைந்து வந்தவர் அரவிந் தர். பாரிஸ்டர் விநாயக சவர்க்காருடன் புரட்சி இயக் கத்தில் ஈடுபட்டிருந்தவர் வ. வே. சு. ஐயர். இவர்கள் இருவருடன் நெருங்கிப் பழகினார் பாரதியார். ஆகவே, இம் மூவர் மேலும் சென்னை அரசாங்கம் ஒற்றர் வாயி லாக ஒரு கண் வைத்திருந்தது.

1811-இல் தூத்துக்குடி 'சப் கலெக்டர்' 'ஆஷ்' துரை சுட்டுக்கொல்லப்பட்டார், வாஞ்சிநாதன் என்பவ ரால். அக் கொலையின் தொடர்பு புதுவையிலும் இருப்ப தாகச் சென்னை அரசாங்கம் எண்ணியது. எனவே,

பாரதியார், அரவிந்தர், ஐயர் ஆகியோர் இல்லங்களைச் சுற்றிப் போலீசாரின் காவல் இருந்தது. நூற்றுக்கணக்கான போலீஸார் முற்றுகையிட்டனர். இவர்களோடு மட்டுமன்றி இவர்களைச் சார்ந்த புதுவை நண்பர்களையும் போலீஸாரின் கண்கள் வட்டமிட்டன.

பாரதியாரே முதலிற் புதுவை புகுந்தவரென முன்னரே அறிவோம். அப்போது ‘சுதேசிகள்’ என்றுற் புதுவை வெறித்து நோக்கியது. எனினும், நாளாவட்டத்தில், அரவிந்தரும் ஐயரும் வந்த சிறிதுகாலங் கழித்துச் சுதேசிகளைப் புதுவை அன்புடன் நோக்கியது. ஆதரவு காட்டியது. சூழ்ந்திருந்து அவர்களின் அறிவுரைகளைக் கேட்டது. இவ்வாறு புதுவை சுதேசிகளுக்கு அரண் செய்தது.

புதுவை நண்பர்கள் தங்களைச் சுற்றும் போலீசார் கண்ணில் மண்ணை யள்ளிப்போடத் தயங்குவதில்லை. அது மட்டுமா? அவர்களை அழவிடுவதும் வழக்கமாயிற்று.

ஒரு நண்பரைப் போலீசார் சுற்றிக்கொண்டிருப்பாரென வைத்துக்கொள்வோம். அவர் ஒரு வீட்டிற் புகுந்தாற் போலீசார் தெருவிலே காத்திருப்பர். உள்ளே சென்ற நண்பர் தோட்டத்தின் வழியாக வெளியே சென்றுவிடுவார். வெளியே காத்திருக்கும் போலீசார் நெடுநேரம் காத்திருந்து ஏமாந்து நிற்பர்.

ஒருநாள் ஒரு கடிதம் பாரதியாருக்குக் கிடைத்தது. அக்கடிதத்திற் பாரதியாரைக் கவிச்சக்கரவர்த்தி என்று புகழ்ந்து, அவருடைய பாடல்களாகிய அமுத வெள்ளத்தைப் பருகக் கையிற் காசின்றி ஒரு புகை வண்டி நிலையத்திலிருந்து மற்றொரு நிலையமாக இறக்கி விடப்பட்டு மெதுவாகப் புதுவை வந்ததாகவும், அன்று

புதுவையிலே மறைந்திருப்பதாகவும், இரவு ஏழு மணிக்கு வருவதாகவும், வெளிச்சத்தைச் சிறிதாக்கி வைத்திருக்கும்படியுங் குறிப்பிட்டிருந்தது. கையொப்பம், 'திருநெல்வேலி அன்பன்' என இருந்தது.

அவ்வாறே ஏழு மணிக்குப் பாரதியார் காத்திருந்தார். விளக்கு மட்டும் பேரொளியாகவே இருந்தது. பாரதியார் 'நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு' என்று திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டிருந்தார். அது அவரால் முன்னரே பாடப்பட்ட 'மறவன் பாட்டு' என்னும் பகுதியில் உள்ள ஓர் அடி. குறிப்பிட்ட நேரத்தில் அந்தத் திருநெல்வேலி அன்பரும் இந்த 'அடி'யைக் காதில் வாங்கியவாறே வந்தார். அவர் தலையைக் கண்டவுடன் அந்த அடியை, 'நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு-ச்-நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு' என அவரைப் பாராதவர்போலவே பாடினார்.

திருநெல்வேலி அன்பர் நல்ல உடற்கட்டுடையவர்; தலைமொட்டை: கழுத்து முதல் அடிவரை ஒரே காவிச் சட்டை; முகத்திலே அழகிய குங்குமப் பொட்டு: இத்தகைய கோலத்துடன் வந்த அவர் கும்பிட்டார். பாரதியாரோ அப்போதுதான் பார்க்கிறவர்போல, 'என்ன இது? துறவியை இல்லறத்தான் வணங்கவேண்டும். தாங்கள் என்னை வணங்குவது அறக்கொடுமை!' என்று நகையுடன் நவின்றார். அவருடைய பார்வை துறவியின் முகத்திலே ஊடுருவியது.

வந்தவர் திடுக்கிட்டார். பார்வையும் அவரைத் திகைப்புறுத்தின. பாரதியாரே, 'தாங்கள்தானே திருநெல்வேலி அன்பர்! என்னைப் பார்க்கத்தானே வந்தீர்கள்? நன்று, பார்த்தாய்விட்டதன்றோ? சென்று வருக!'

என்று படபடவெனப் பகர்ந்தார். வந்தவர் சிறிது அமைதியடைந்தார். இந்தி, ஆங்கிலம், தமிழ், மலையாளம் முதலிய மொழிகளிலெல்லாம் தம் பேச்சுத் திறமையை அளந்து கொட்டினுர். பேசப் பேசப் பாரதியாரின் உள்ளம் கனன்றது.

'அரவிந்தரை எப்போது பார்க்க முடியும்?' என்ருர் வந்தவர். 'ஐயரைப் பார்த்துவிட்டீரா?' என்ருர் பாரதியார். வந்தவர் வெட்கமுற்று எழுந்து கைகுவித்துப் புறப்பட்டார். அவர் போகும்போது பாரதியார், 'ஓய் வஞ்சகத் துறவியே! நன்னெறியிலே மேன்மையுடன் வாழவேண்டும். இப்படி மட்டநெறியிலே காலை வையாதீர்,' என்று இடித்துக் கூறினுர்.

ஒருநாள் ஒரு நவமணி வணிகர் வந்தார். 'கற்கள் ஏதேனும் வேண்டுமா?' என வினவினுர். பாரதியார் அவரை ஏற இறங்க விழித்து நோக்கினுர். வணிகரின் முகம் அச்சமுற்றது. 'ஓய்! என்னிடத்திலே சில உயர்ந்த மணிகள் உள்ளன. அவைகளை உங்கள் சர்க்காரிலே விலைபோகும்படி நீர் சிறிது தரகுவேலை செய்யுமே!' என்ருர். மற்றும், 'உம்மிடம் போலீஸ் குறிப்புச்சுவடி உள்ளதா?' என்றும் வினவினுர். வணங்கித் திரும்பினுர் வந்தவர்.

இவ்வாறு பல ஒற்றர்கள் வந்து ஏமாந்தனர். எனினும், பாரதியாரின் பெருமையை உள்ளவாறு உணர்ந்தே சென்றனர்.

முருகேசன் என்ற இளைஞன் ஒருவன் பாரதியார் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்தான். அவன் திடீரென்று காணுமற் போனுன். அவன் போன காலத்திற்

பாரதியார் எழுதிப் பெரும்பாலும் முடித்திருந்த 'சின்ன சங்கரன் கதை'யுங் காணுமற்போயிற்று. நண்பர்கள் முருகேசனை ஐயுற்றனர். ஆனல், பாரதியார், 'ஓரிடத்தில் இருப்பவர்கள் ஒருவரை யொருவர் ஐயுற்ருல் அந்த இடம் உருப்படாது,' என்று கூறி, அவர்கள் ஐயுறுவதைக் கண்டித்தார். "'சின்ன சங்கரன் கதை' கையெழுத்துப் பிரதியையும் அவனையுங் காணேமென்ருல், ஐயுருமல் என்செய்வது?" என நண்பர்கள் நவின்றனர். பாரதியார் உள்ளங் குழம்பியது.

சின்னசங்கரன் கதை என்பது பாரதியாரின் வாழ்க்கைவரலாற்றை ஒட்டிய கற்பனைக் கதை. அந் நூலில் நகைச்சுவையும் அறிவுரைகளும் நிறைந்திருக்கும். அது காணுமற்போனது பாரதியாருக்கும் அவருடைய நண்பர்களுக்கும் வருத்தமாக இருந்தது.

நாற்பது நாட்கள் கழிந்திருக்கலாம். முருகேசன் என்புந் தோலுமாக வந்து சேர்ந்தான். பாரதியாரை அவன் கண்டதும் அணைகடந்த வெள்ளமெனக் கண்ணீர் வாரக் கோவெனக் கதறினுன். பாரதியார் அவனைக் கட்டித் தழுவிக்கொண்டு, 'எதற்காக அழுகிருய்? ஆண் பிள்ளை அழுவதா? குடி முழுகிவிட்டதுபோல் அழாதே,' என்று ஆறுதல் கூறினுர்,

சின்னசங்கரன் கதையுடன் ஓடிப்போன பையனை இவ்வாறு ஆதரவு செய்கிருரேயென நண்பர்கள் திகைத்தனர். அவன் சிறிது தெளிவடைந்தான். அவனைத் தெளிவாக்கிய பிறகு, 'முருகேசா! எங்கே போயிருந்தாய் நீ! இந்திரசித்து மாதிரி திடீரென்று மறைந்துவிட்டாயே!" என நகைமுகத்துடன் பாரதியார் வினவினுர்.

அவன் கூறின கதை :

"ஆங்கில இந்தியப் போலீசாரில் ஒருவர் என்னிடம் அன்புடன் உரையாடிக்கொண்டிருந்தார் இங்கே. ஒரு நாள் அவர் என்னை விழுப்புரத்திற்குப் பொழுதுபோக் காகப் போய்வரலாமென அழைத்தார். நம்பிப்போனேன். விழுப்புரம் போனவுடன், 'உன்னைச் சிறைப்படுத்தியிருக் கிறேன்,' என்றார். கலங்கிவிட்டேன். சென்னைக்குக் கொண்டுபோனார்கள். அங்கே சென்றவுடன், 'பாரதி வீட்டிலே வேலைசெய்கிறாயே; அவரைப்பற்றி நீ அறிந் ததையெல்லாம் விளக்கமாகச் சொல்,' என்று என்னை அறையுங் குத்தும் அடியுமாகத் துவட்டி யெடுத்தனர். 'சிறிது கற்ற எனக்கும் விளங்குமாறு கவிதை யெழுத வல்லவர்,' என்றேன். 'இதை நீ சொல்லித்தானா தெரிந்து கொள்ளப்போகிறோம்?' என்று மறுபடியும் துன்புறுத் தினர். ஒரு திங்கள் வரையில் அந்த நரகத்திற் கிடந் தேன். பயனொன்றுங் கிடைக்காததால் என்னை விடுவித்துவிட்டனர். சென்னையில் உறவினரொருவ ரிடஞ் சென்று பணம் பெற்றுப் புதுவைக்குச் சீட்டு வாங்கி வந்து சேர்ந்தேன்!"

இவ்வாறு கூறி முடித்தான்.

பாரதியார் இக்கதையைக் கேட்டு உளம் வருந்தி னார். நண்பர்கள் இது வீண் அளப்பு எனவே எண்ணி னர். ஏனெனில், அவன் கூறிய கதை ஒழுங்காக நம்பக் கூடிய முறையில் இல்லை. முருகேசனைப் பாரதியார் திரும்பவும்வேலைக்கமர்த்திக்கொண்டார். சின்னசங்கரன் பிரதி காணாமற்போனதற்கு இவன் காரணமாக இருக்க லாம் என்று பாரதியார் ஐயுற்றாலும் அவனை மன்னித் துப் பரந்த நோக்குடன் வேலைக்கு வைத்துக்கொண்ட பண்பை என்னென்பது!

ஒற்றர்களின் வேலை இத்துடன் நிற்கவில்லை. பொது மக்கள் மூலமாக வீண்புரளிகளையும் உண்டாக்கி விடுவார்கள். ஒருவன் நடுக்கத்துடன் ஓடிவருவான். 'சுதேசிகளை வலுக்கட்டாயமாகத் தூக்கிக்கொண்டுபோய் ஆங்கில எல்லையிலே சிறைப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்' என்பான். (நந்தகோபால் செட்டியார் புதுவையில் ஓர் அரசியல் கட்சித் தலைவர். சிறந்த செல்வாக்கும் பொருள் வருவாயும் உடையவர். அவர் பெயரைக் கேட்டாற் புதுவை நடுங்கும்) ஒருவன், 'பெண்களைக்கொண்டு பாரதியாரை மயக்கிச் சிறைப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்,' என்பான்.

இவைகளைக் கேட்டுப் பாரதியார் நகைப்பார். 'அச்சமில்லை' என்பது அவரது பல்லவியன்றோ ?

ஒருமுறை வ. வே. சு. ஐயர் வீட்டுக் கிணற்றில் 'சீல்' வைத்த சாடியொன்று கிடைத்தது. வீட்டு வேலைக்காரி கிணற்றிலே நீரிறைக்கும்போது கண்டுபிடித்தாள். ஐயர் அதனைத் திறவாமலே புதுவை மாஜிஸ்ட்ரேட்டிடம் கொண்டுபோய்க் கொடுத்தார். அவர்கள் அதனைத் திறந்து பார்த்தனர்,

அதிற் சில துண்டறிக்கைகள் இருந்தன. அந்த அறிக்கை தமிழ்நாடு முழுவதும் புரட்சி இயக்கம் இருப்பதாகவும் அந்த இயக்கத்தின் நிலையம் புதுச்சேரி என்றும் விளக்கப்பட்டிருந்ததுடன் வெடிகுண்டு செய்யும் முறைகளும் சில ஆணிகளும் ஊசிகளும் இருந்தன.

இது சுதேசிகளைப் பிடிக்க வைத்த கண்ணி. இது ஐயர் வீட்டிலிருந்து கிடைத்தாற் சுதேசிகளைச் சிறைப்படுத்த வழியாகும் என்பது ஒற்றரின் திட்டம். உண்மையுணர்ந்த மாஜிஸ்ட்ரேட் 'அஞ்சவேண்டா' என்றார்.

திட்டப்படிப் போலீசார் ஆராயத் தொடங்கினர். அரவிந்தர் வீட்டிலும் பாரதியார் வீட்டிலும் ஒப்புக்குத் தேடிவிட்டு ஐயர் வீட்டிலே மட்டும் துழாவிப் பார்த்தனர். கிணற்றிலிறங்கிச் சேற்றையும் நீரையும் வெளிப் படுத்தி ஆராய்ந்தனர். தங்கள் திட்டப்படி அக்கிணற்றி லிட்ட சாடியைக் காணுமல் திடுக்கிட்டனர். பிறகு, உண்மையுணர்ந்து வெட்கமுற்றனர்.

எனினும், இரண்டு தினங்கள் வரையிற் போலீ விசாரணை நடந்தது. பிறகு, குற்றமில்லையெனத் தள்ளி விட்டனர்,

ஒருமுறை ஒருவர், 'உங்களுக்குத் தடை நீங்கிவிட் டது; வாருங்கள் ஆங்கில எல்லைக்கு' என ஒரு மோட்டா ரில் அழைத்துச் சென்றார். பிரஞ்சு எல்லையைத் தாண்டும் போது பாரதியாரின் நண்பரொருவர் எதிரே வந்தார். அவர் பாரதியாரைக்கண்டு மோட்டாரை நிறுத்தி வின வினர். பாரதியார் கூறிய விடையைக் கேட்டுக் கலங்கி, 'அப்படியொன்றும் இல்லை. இது வஞ்சக வேலை. வாருங் கள்,' எனத் தம் மோட்டாரிலே திருப்பி அழைத்துவந்து சேர்ந்தார். அப்போது உண்மையுணர்ந்த பாரதி ஒற்றன் பால் இரங்கிப், 'பகைவனுக் கருள்வாய்,' என்ற நெஞ்சறி வுறுக்கும் பாட்டொன்றைப் பாடினர்.

ஆங்கில அரசாங்கம் 'சுதேசி'களைப் புதுவையி லிருந்து வெளியேற்ற எடுத்துக்கொண்ட இறுதிப்படை 'புறமக்கள் சட்டம்'. 'சுதேசிகள்' யாவரும் பிரெஞ்சு மக்கள் அல்லர். ஆங்கில எல்லையிற் பிறந்தவர்கள். அவர் களை வெளியேற்றவேண்டும் என்று பிரெஞ்சு அரசாங் கமே சட்டமியற்றிவிட்டாற் 'சுதேசிகள்' வெளிவராமல் என்ன செய்யமுடியும்?

அக்காலத்திற் பிரெஞ்சு அரசாங்கம் ஆங்கிலரின் துணையை விரும்பி நின்றது. தன்னை ஜெர்மனியரிடமிருந்து காத்துக்கொள்ள ஆங்கிலரின் துணை வேண்டுமென நம்பிற்று. ஆகையால், ஆங்கிலர் விரும்பியவாறு அச் சட்டமியற்ற ஒப்பியது.

பிரெஞ்சு கவர்னர் அதனைச் சட்டமாக்கும் முன்னரே சுதேசிகள் அவரைக் கண்டனர். அவர்களின் விருப்பப்படிக் கவர்னர் ஒரு திருத்தம் செய்தார். அச் சட்டமியற்றுங் காலத்திற்கு முன் ஓராண்டு பிரெஞ்சு நகரிற் குடியிருந்த வெளியார், பிரெஞ்சு 'ஆனரெரி மாஜிஸ்ட்ரேட்டுகள்' ஐவரிடம் நன்மதிப்புக்கையெழுத்து வாங்கித் தங்களைப் பதிவு செய்துகொண்டால் அவர்கள் பிரெஞ்சுக் குடியாகக் கருதப்படுவர் என்று கூறியது அத்திருத்தம்.

இந்தச் சிறிய திருத்தத்தை ஆங்கில அரசாங்கம் பெரியதாகக் கருதவில்லை. 'அம்மியே ஆகாயத்தில் பறக்கும்போது இந்த எச்சியிலை எந்த மூலை' என்று எண்ணியது. 'ஐவர் கையெழுத்தன்றோ வேண்டும்? இது சுதேசிகளாற் பெறமுடியா,'தென்று ஆங்கில அரசாங்கம் எண்ணியதிற் பிழையொன்றுமில்லை.

சுதேசிகளும் முகவாட்டத்துடனேயே இருந்தனர். அவர்களுக்கு 'ஐந்து கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகள் நன்மதிப்புத் தரவேண்டுமே,' என்ற ஏக்கம் பெரிதும் இருந்தது. ஐயரும் அரவிந்தரும் பாரதியாரும் சிறிது தயங்கினார்கள். இந்தச் சட்டம் வந்த அன்று இரவு யாரும் நன்றாகத் தூங்கவும் இல்லை.

மறுநாட் காலையிற் பாரதியார் ஒரு நண்பரின் வீட்டிற்குச் சென்றார். அவர் பெயர் கலவலசங்கரன் செட்டியார். பாரதியாரைக்கண்டதும் அன்புடன் வரவேற்றார்.

'நீங்கள் இருந்தும் நாங்கள் புதுவையை விட்டுப் போகவேண்டுமோ? புதுச்சட்டம் தங்களுக்குத் தெரியாதா?' என்முர் பாரதியார்.

'நான் இப்போதுதான் வெளியூரிலிருந்து வருகிறேன். புதுச்சட்டம் தெரியாது. அஃது என்ன?', என்று வினவினார் செட்டியார்.

பாரதியார் சட்டத்தைக் கூறினார்.

'இவ்வளவுதானே; ஐவர் கையெழுத்தும் இன்றே—இன்னும் இரண்டுமணி நேரத்திலேயே வாங்கித் தருகிறேன். நானும் ஒரு கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுத்தான். கையெழுத்து வாங்கவேண்டிய தாளை என்னிடம் கொடுங்கள். இரண்டுமணிக்கப்புறம் தங்களை நான் தங்கள் வீட்டில் வந்து பார்க்கிறேன்,' என்முர் செட்டியார்.

பிறகு, நீங்கள் பாடிய ஏதாவது புதுப்பாட்டொன்று பாடுங்கள் என்று செட்டியார் வினவினார். பாரதியார், 'ஜெயமுண்டு பயமில்லை மனமே' என்ற அண்மையிற் பாடி வைத்திருந்த பாட்டைப் பாடினார்.

அன்று பகல் மூன்று மணிக்குள் 'சுதேசிகள்' யாவரும் 'ஐவர்' கையெழுத்துடன் தங்களைப் புதுவைக் குடியாகப் பதிவுசெய்துகொண்டனர். பிரெஞ்சுப் போலீசார் அதனை ஒப்புக்கொண்டனர். ஆங்கிலப் போலீசார் அயர்ந்துபோயினர். எனினும், மற்றொரு முயற்சி செய்தனர்.

இந்தியாவில் பிரெஞ்சு ஆட்சியில் இருக்கும் இடங்களையெல்லாம் ஆங்கில அரசாங்கத்தார் வாங்கிக்கொண்டு நிலமாற்றாக மேற்கிந்தியத் தீவுகளிற் சிலவற்றைப் பிரெஞ்சு அரசாங்கத்திற்குக் கொடுத்துவிடுவதாக ஒப்

பந்தம் பேசினர். இதனைத் தடுக்கப் பொன்னு-முருகேசம் பிள்ளை பாரிஸிலுள்ள நண்பர்களுக்குக் கடிதமூலம் வேண்டுகோள் விடுத்தார். வேறுசில செல்வாக்குள்ள பெரியோர்களும் முயற்சித்தனர்.

இங்கிலையிலே பிரெஞ்சு அமைச்சர்குழுவில் மாறுதல் ஏற்பட்டது. 'பவாங்கரே' என்பவர் முதல் அமைச்சரானார்.

"பிரெஞ்சுக் கொடி பறக்கும் எந்த இடத்தையும் மாற்ற நான் ஒப்பமாட்டேன். பிரெஞ்சுக்குருதி சிந்திய மண் எனக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் மதிப்புந் தூய்மையும் பொருந்தியது. மேலும், 'துய்ப்ளெக்ஸ்' உருவச்சிலை நிற்கும் புதுச்சேரியை மாற்ற இடங்கொடுப்பது இயலாது," என்று அந்த முதலமைச்சர் முழங்கிவிட்டார்.

இம்முறையே பலவகையாலும் புதுவையிலிருந்து 'சுதேசி'களை வெளியேற்றிச் சிறைசெய்ய ஆங்கிலப் போலீசார் செய்தவை ஒன்றும் பயன்தரவில்லை.

புதுவையில் இருந்த இறுதிக்காலத்திற் சுதேசமித்திரனுக்குக் கட்டுரையெழுதித் திங்களொன்றுக்கு முப்பது ரூபா ஊதியம் பெற்றுவந்தார் பாரதியார். புதுவையிற் பாரதியார் வாயிலாக நடந்துவந்த பத்திரிகைகள் நின்றுவிட்டன.

## கா. பிற்காலம்

### விடுதலை

1914-ஆம் ஆண்டில் தொடங்கிய பெரும்போரின் முடிவிலே 1918-ஆம் ஆண்டில் அரசியற் குற்றவாளி களுக்குப் பொதுவான விடுதலை கிடைத்தது. சென்னை யில் நடந்துவந்த 'தேசபக்தன்' வாயிலாகத் திரு. வி. கலியாணசுந்தரனார் போன்றவர்களின் முயற்சியாலே அது கிடைத்தது.

சுதேசமித்திரன் தலைவர் அரங்கசாமி ஐயங்கார் எழுதியதன்மேற் பாரதியார் புதுவையைவிட்டுக் கூட லூர் வந்தார். பிரெஞ்சு எல்லையைவிட்டதும் போலீசார் பாரதியாரைச் சிறைப்படுத்தினர். அரங்கசாமி ஐயங் காரின் முயற்சியால் அரசாங்க எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபடுவதில்லையெனும் ஒப்பந்தத்துடன் விடுதலை பெற்றார். சுதேசமித்திரன் எப்போதும் பாரதியாரை வரவேற்கும் என்று ஐயங்கார் கூறினார்.

பிறகு, பாரதியார் திருநெல்வேலி மாவட்டத்தில், கடையத்திலும் எட்டையபுரத்திலும் சிறிதுகாலம் வாழ்க்கைநடத்தினார். அங்கெல்லாம் அவருடைய சம நோக்குக்கு இடங்கிடைக்கவில்லை. அவர் யார்வீட்டிலும் யாருடனும் உண்கிறார் என்று விலக்கிவைத்துவிட்டனர் உறவினர். எனினும், விடாமல் உடன்வந்தவன் வறு மைத் தோழனே.

### சென்னை வாழ்வு

எனவே, பாரதியார் கடையமும் எட்டையபுரமும் பிடிக்காமல் வந்துசேர்ந்தார் சென்னைக்கு. முன்போலவே சுதேசமித்திரனுக்குக் கட்டுரை எழுதியும் சொற் பொழிவு செய்தும் காலங்கழித்தார். திருவல்லிக்கேணிக்

கடற்கரையிலே அவருடைய சொன்மாரிபெய்யும். இளைஞர்கள் நூற்றுக்கணக்கிலே முன்கூட்டியே வந்து காத்திருப்பர்.

ஒருகூட்டத்தில் திரு. சத்தியமூர்த்தி முதலிற் பேசினார். அவர் அப்போது பாரதியாரை நன்றாக அறியார். ஆகவே, 'நீங்கள் வழக்கமாகக் கேட்கும் பாரதியின் சொற்பொழிவு நாளைக்கு நடைபெறும். இன்று இத்துடன் கூட்டம் முடிகிறது,' என்று அறிவித்துவிட்டுப் போய்விட்டார். எனினும், கூட்டம் கலையவில்லை.

பிறகு, பாரதியார் எழுந்து முழங்கினார். காட்டாற்று வெள்ளமெனக் கரைபுரண்டோடும் பாரதியாரின் சொல் வெள்ளம் அன்று இரவு பதினொரு மணி வரை பெருகியது. அன்றுதான் 'பாரத சமுதாயம் வாழ்கவே' என்று தொடங்கும் பாட்டும் பாடப்பெற்றது. இவ்வாறு அவருடைய சொற்பொழிவு நடைபெற்றது.

### காந்தியைக் கண்டார்

1919-ஆம் ஆண்டு 'பிப்ரவரி'த் திங்களிற் காந்தியடிகள் சென்னைக்கு வந்தார் 'ரௌலட்' சட்டத்தை நீக்குவதற்குரிய முயற்சியில் அன்பர்களின் வேண்டுகோளின் வண்ணம் அடிகள் வந்திருந்தார். வந்து தங்கியிருந்த இடம் ராஜாஜியின் பங்களா. அது, 'கத்தீட்ரல் ரோட்'டில் இரண்டாம் எண்ணுள்ளது. நாலைந்து நாட்கள் தங்கியிருந்தார் காந்தியார்.

ஒருநாள் நண்பகல் இரண்டு மணிக்குப் பாரதியார் காந்தியடிகளை நாடி அங்குச் சென்றார். காந்தியடிகள் ஒரு திண்டு மெத்தையில் சாய்ந்தவாறு அமர்ந்திருந்தார். மகாதேவ தேசாய், அடிகள் கூறுவதை எழுதிக்கொண்

டிருந்தார். ஏ. அரங்கசாமி ஐயங்கார், ராஜாஜி, சத்திய மூர்த்தி முதலானவர்கள் அவர் எதிரே நின்றுகொண் டிருந்தனர். பாரதியார் 'மடமட'வென்று உள்ளே சென் றார். காந்தியடிகளின் அருகிலே அவரை வணங்கிவிட்டு அமர்ந்துவிட்டார்.

'நண்பர் காந்தியாரே! இன்று மாலை ஐந்தரை மணிக்கு நான் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு கூட்டத்திற் பேசவேண்டும். தாங்கள் அதற்குத் தலைமை யேற்க முடியுமா?'

காந்தியடிகள் மகாதேவ தேசாயைத் தம் அலுவல் அப்போது என்ன என்று வினவினர். அன்று மாலை ஐந்தரை மணிக்கு வேறோரிடத்தில் இருக்கவேண்டும் என்று குறிப்பைப்பார்த்துக் கூறினார் தேசாய்.

காந்தியடிகள் பாரதியாரைப் பார்த்து, 'வேறொரு நாளைக்கு முடியுமா?' என்று அன்புடன் வினவினர்.

பாரதியார், 'இயலாது. நான் சென்றுவருகிறேன். தாங்கள் தொடங்கும் இயக்கம் நன்கு பயன்தரவேண்டும் என வாழ்த்துகிறேன்,' என்று கூறிவிட்டு எழுந்து சென்றுவிட்டார்.

பாரதியார் சென்றவுடன், 'இவர் யார்?' என அடி கள் அங்கிருந்தோரை வினவினர். 'இவர் எங்கள் நாட்டுக் கவி,' என ராஜாஜி விடையளித்தார். 'இவரை நன் றாகப் பார்த்துக்கொள்ளவேண்டும்,' என்றார் அடிகள்.

காந்தியடிகளுக்கெதிரில் மற்றையோர் நின்றிருக்க வும் பாரதியார் அடிகளை வணங்கிவிட்டு வீறுடன் அருகில் அமர்ந்து வினவியதும் அடிகளின் பணியை வாழ்த்தியதும் பாரதியாரின் மனப்போக்கை நன்கு அறி விக்கின்றனவல்லவோ?

## இறுதி

சென்னை - திருவல்லிக்கேணியிற் பார்த்தசாரதி கோயிலுக்கு அருகிற் பாரதியார் குடியிருந்தார். அவர் அடிக்கடி பார்த்தசாரதி கோயிலுக்குத் தேங்காயும் பழமும் எடுத்துச்செல்வார். அக்கோயிலிலே ஒருயானை இருந்தது. அதற்கு அவைகளைக் கொடுப்பார். அது தன் துதிக்கையால் அவைகளை வாங்கிக்கொள்ளும்.

'காக்கை குருவி எங்கள் சாதி' என்பது பாரதியாரின் கொள்கையன்றோ? யானையையும் அவர் அவ்வாறு நினைத்துக்கொண்டு பழகினார் போலும்! சிலநாட்களில் அதனை அருகிற்சென்று தடவிக்கொடுக்கும் நிலைக்கு வந்துவிட்டார்.

ஒருநாள் வழக்கம்போல நெருங்கிப் பழமுந் தேங்காயும் பரிவுடன் கொடுத்தார். அதுவோ அவற்றுடன் பாரதியாரையும் பற்றியிழுத்துத் தன் கால்களுக்கிடையே இட்டுக்கொண்டது. அருகிலிருந்தோர் அலறினர். இந்நிலையிற் குவளைக்கண்ணன் என்னும் பாரதியாரின் நண்பர் ஓடிவந்து துணிவுடன் பாரதியாரை மீட்டார். பாரதியார் பிழைத்தார்.

எனினும், யானையின் செயலாற் பாரதியாருக்கு ஊமைக்காயம். மூன்று திங்கள் வரையிற் படுக்கையாகக் கிடந்து 1921-ம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் பதினோராவது நாள் தமது ஊனுடலை விடுத்துப் புகழுடல் பெற்றார்.

அவரது ஊனுடலை அடக்கஞ் செய்யவும் அவர் வீட்டிற் பொருளில்லை. அன்பர்களின் பொருள் கொண்டுதான் அடக்கஞ் செய்யப்பட்டது.

இதுதான் தமிழ்நாட்டுப் புதுமைக்கவியான பாரதியாரின் வாழ்க்கை.

### பாரதியார் தொண்டு

பாரதியாரின் தொண்டு தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் கிடைத்தது. பழமையான கருத்துக்களைப் புதிய எளிய கருத்துக்களாக மாற்றித் தமிழ்மொழியைப் புத்தணியால் அழகுபடுத்தியுள்ளார். பாஞ்சாலி சபதம், குயில் என்னும் இரண்டும் காவிய முறையில் அமைந்தவை. கண்ணனையும், சக்தியையும் வழிபடும் முறையிற் சிறந்த பாடல்களை அமைத்திருக்கிறார். தனிப்பாடல்கள் பலஇயற்றியிருக்கிறார். இவைகளெல்லாம் தமிழ்மொழித் தொண்டைச் சார்ந்தவை. நாட்டுப் பாடல்களெல்லாம் நாட்டுத் தொண்டை யுணர்த்துவன. தமிழ்நாட்டினையும் பாரத நாட்டினையும் எண்ணி யெண்ணி அடிமைத் தளையை நீக்கும் உரிமையுணர்ச்சியை ஊட்டும் பாடல்கள் படிக்குந்தோறும் உணர்ச்சியூட்டுவன,

'எந்தையுந் தாயும் மகிழ்ந்து குலாவி யிருந்தது மிந் நாடே,' எனத் தொடங்கும் நாட்டு வணக்கப் பாடலும், 'பாருக்குள்ளே நல்ல நாடு-எங்கள்-பாரதநாடு' என்பதும், 'மன்னும் இமயமலை யெங்கள் மலையே' என்று மகிழ்வதும், பாரதமாதா திருப்பள்ளி யெழுச்சியும், 'தாயின் மணிக்கொடிப்' பாட்டும், 'எங்கள் தாய்' இசையும் நெஞ்சிற் கிளர்ச்சி செய்வன. மிதவாதிகளைத் தாக்கித் திலகர் கட்சியை ஊக்கிப் பாடியிருப்பது படித்தின்புறத் தக்கது. ஆங்கிலேயருக்கும் ஒரு நாட்டுப் பற்றுடையவனுக்கும் நடக்கும் உரையாடலாகத் தென்னாட்டு உரிமை வீரர் வ. உ. சிதம்பரனாரின் நிலையை விளக்கியுள்ளார். லாலா லஜபதிராய், தாதாபாய்

நௌரோஜி, திலகர், காந்தியடிகள் ஆகியோரைப் போற்றியுள்ளார்.

'பாரத சமுதாயம் வாழ்கவே' என வாழ்த்தியிருக்கும் பாடலிற் சமநோக்குடன், 'தனியொருவனுக் குணவிலையெனிற் சகத்தினை அழித்திடுவோம்' என்பது எத்துணைச் சீரிய கருத்து! 'நெஞ்சு பொறுக்குதிலையே' எனப் பாரதமக்களின் கோழைத்தன்மையைக் குறிப்பிடும் போக்கே தனிச்சிறப்புடையது. மந்திரவாதியைப் போற்றுவதும், சிப்பாயைக் கண்டஞ்சுவதும், பேய்களை நினைந்து நடுங்குவதும் போன்ற கோழைத்தன்மைகள் உள்ளவாறு கூறப்பட்டுள்ளன. மக்களைப் பல பிரிவினராகப் பிரித்திருப்பதைக் கண்டு மனம் உடைகிறார் பாரதியார். கஞ்சி குடிப்பதற்கில்லாமலிருந்தும் அதன் காரணத்தைக்காண விழையாத பேதை மக்களின் நிலைக்குப் பாரதியார்போல் எவரும் இரங்கார் எனலாம்.

பாரத நாட்டில் 'வலிமையற்ற தோளினர்' முதலானவர்களைப் 'போ, போ, போ' என ஓட்டுவதும், 'ஒளி படைத்த கண்ணினர்' முதலானவரை வரவேற்பதும் விழுமிய கருத்துக்களை உடையவை. வெளிநாட்டிலே, கரும்புத் தோட்டத்திலே நம்நாட்டுக் காரிகையர் வாடுவதைக் கண்ணீரால் காட்டுகிறார்.

பெண்களுக்காகப் 'புதுமைப் பெண்ணைப்' படைத்துப் 'பெண்மை வாழ்'கென்று கூத்திட்டுப் பாடுகிறார். 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானம்' ஆக்கி விட்டார்.

'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்' 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே'

என்பவை பாரதியாரின் தமிழ்ப்பற்றுக்கு எடுத்துக்காட்டானவை. தமிழ்மொழி வளம்பெற அவர் கூறும் வழிகள் மிகவும் உயர்ந்தவை.

பாரதியாருடைய கட்டுரைகளுங் கதைகளும் புதிய கருத்துக்களுடையவை; சீர்திருத்த நோக்கமுடையவை. மற்றும் வேதக் கருத்துக்களைத் தமிழில் நிறைத்திருக்கிறார். பகவத்கீதையைத் தமிழ்ச் சுவையுடன் மூலப் பொருள் கெடாமல் மொழிபெயர்த்திருக்கிறார். அவரெழுதிய கதைகளிலெல்லாம் அவருடைய வாழ்க்கையைக் காணலாம். வறுமையை எள்ளி நகையாடும் அவருடைய வாழ்க்கையின் ஓவியம்,ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் பதியவேண்டும். எனவே, அக்கதைகளில் எழுதியுள்ளார்போலும். அவற்றைப் படித்தல்வேண்டும் தமிழ்மக்கள்.

### பாரதியாரின் பண்புகள்

'கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால் கைகொட்டி நகையாரோ?' என்ற பாரதியாரின் உரிமை யெண்ணத்தைப் புகழ்வதா? 'அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே' என அச்சத்தை ஓட்டிய உளவுறுதியைப் போற்றுவதா? 'தனிஒருவனுக் குணவிலை யெனிற் சகத்தினை யழித்திடுவோம்' என்ற பொது நோக்கை வியப்பதா?

பாரதியார், 'காக்கை குருவி யெங்கள் சாதி—கடலும் மலையும் எங்கள் கூட்டம்' என்பவர். அன்பிலார் கொடுப்பதை அணுவும் விரும்பாமல், 'மோதி மிதித்து விடு பாப்பா—அவர்—முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா' எனக் கூறுபவர். 'மேதைக்கு வறுமை மட்டும்

போதாதோ? பிறர் நகைத்தலும் வேண்டுமோ? எனப் புழுங்குவார்.

### குழந்தையுள்ளம்—கவியரசன்

பாரதியார் ஒருமுறை திருவனந்தபுரத்திற்குச் சென்றிருந்தார். அங்கு மிருகக்காட்சிச் சாலையைக் குடும்பத்துடன் சென்று பார்த்தார். அங்கு ஒரு சிங்கத்தைக் கண்டவுடன் அதைத் தடவிக் கொடுக்கத் தொடங்கிவிட்டார். மனைவியின் அச்சத்தையும் மற்றோர் தடுப்பையும் பொருட்படுத்தவில்லை. 'விலங்கரசனே! நான் கவியரசன் பாரதி. உன்னைக் காண வந்துளேன். எதோ, என்னை வரவேற்க முழங்குவாயா?' என்றாராம். அதுவும் (இயற்கையாக) முழங்கியதாம். என்னே குழந்தையுள்ளம்! இதனால் அன்றோ பிற்காலத்தில் யானையினிடம் அகப்பட்டார்!

### வீறுபெற்ற மனம்

பாரதியார் எட்டையபுரம் மன்னருக்கு ஒரு சீட்டுக் கவிபாடி விடுத்தார். அது பழைய புலவர்களின் மிடுக்குடன் கூடியது. 'மகாராச ராசேந்திர வேங்கடசு ரெட்டப்ப பூபதிக்குக் கவிராச சுப்பிரமணிய பாரதீ எழுதிய ஓலைத்தூக்கு, கற்கண்டைச் சுவைக்குங் குழந்தை போல நீ தமிழைச் சுவைப்பவன். நான் உனக்கென என் புகழ்மிக்கதாங் கவியைக் கொண்டுவந்தேன். என் கவி தமிழுக்குப் புகழூட்டுந்தன்மையது. சொல்லும் பொருளுஞ் சுவையும் புதியவை. என் கவியைப் பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலருங்கூடப் புகழ்கின்றனர். அத்தகைய என் கவியைக் கேட்டுப் போற்றி வெற்றி முரசுடன் சால்வை, பொற்பை, பல்லக்கு, பரிவாரம் முதலிய

யாவும் அளித்து வாழ்வு பெறுக!' என்ற பொருளில் அமைந்தது அக் கவிச்சீட்டு.

தம்மிடம் பழகிய பிள்ளைக் கவிஞர் இத்தகைய புதிய கவிஞராகப் பேறுபெற்றது அரசருக்கு மகிழ்ச்சியை யூட்டியது. எனினும், ஆங்கில அரசாங்கத்தின் அடிவருடும் அவருடைய உள்ளம் அதன் எதிர்ப்பாளரை வரவேற்க அஞ்சி நடுங்கியது.

### காக்கை குருவி எங்கள் சாதி

ஒருமுறை பாரதியார் குடும்பத்துடனும் நண்பர்களுடனும் மைத்துனர் அப்பாதுரையின் இல்லத்திற்குச் சென்றார். அப்பாதுரை அன்புடன் வரவேற்றுத் தனியாக இல்லம் ஒன்று அமைத்து இருக்கச் செய்தார். அங்கேயே சிற்றுண்டியும் காப்பியும் அனுப்பினர்.

தோசையை எல்லோரும் அமர்ந்து உண்டனர். பாரதியார் இலையில் ஐந்தாறு தோசைகள் இருந்தன. அப்போது அங்கே காக்கைகளும் குருவிகளும் வந்தன. 'காக்கை குருவி யெங்கள் சாதி' என்று பாடிய பாரதியார் அப்போதும் அப்பாட்டைப் பாடியவாறு தோசையை விண்டு விண்டு அவைகட்குப் போட்டார் அவைகளும் அச்சமின்றி வந்து இலையில் இருந்த தோசையைக் கொத்தியிழுத்தன. இவரும் அவைகளை ஓட்டாமல் அவற்றுடன் உண்டார். அறிஞர்களின் சொல்லும் செயலும் ஒன்றாகவேயிருக்கும்.

### இயற்கைக் காட்சி வெறி!

காலையிலும் மாலையிலும் பாரதியார் வீட்டிலே தங்குவதில்லை. ஊருக்குப் புறத்திலே எங்கேனும் உலவுவார். காலை இளஞாயிறும் மாலைச் செவ்வானமும்

பாரதியாரின் கருத்தை மயக்குவன. அக்காட்சியில் ஈடு பட்டிருக்கும்போது உலகம் புரளினும் உணரார். புதிய புதிய நிலையில் அக்காட்சிகளைக் கண்டு பாடுவார். அப்போது அவ' த:ம்மை மறந்து வெறியரென விளங்கு வார்.

கடையத்தின் புறத்திலே ஒருகல் தொலைவில் ஒரு குன்று. அதன் அருகே விரைந்து கூழாங்கற்களின் இடையே துள்ளிக் குதித்தோடும் சிற்ருறு ஒன்று— இவை பாரதியாரை எப்போதும் இழுப்பன. அங்கே மக்கள் நடமாட்டம் இராது. அழகிய மரங்கள் நிறைந்த தோட்டங்கள் அங்கே உண்டு.

ஒருநாட்காலை பாரதியாரும் அவர் மாணவர் விசுவ நாத பாரதி என்பவரும் அந்தச் சிற்ருற்றிற் பல்விளக்கிக் கொண்டிருந்தனர். அப்போது நீரோட்டத்துடன் கதிரவனின் செங்கதிர்கள் தழுவி விளையாடின. பாரதி யின் உள்ளம் அக்காட்சியில் ஈடுபட்டது. தம்மை மறந்தார், தம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களை மறந் தார், நண்பரை மறந்தார். நீரிலே துளைந்து துளைந்து ஆடியவாறு 'பக்தியினுலே — தெய்வ — பக்தியினுலே' என்று பாடத் தொடங்கிவிட்டார். அவரை நோக்கிய நண்பர் திகைத்தார். இன்பவெறி பாரதியாரை விழுங்கி யிருந்தது. அவர் மெய் நடுங்கியது. நீண்டநேரங் கழித்த பிறகே தெளிவுபெற்ருர். இவ்வாறு பலமுறை நடக் கும். தெளிந்த பிறகு அவர் அப்போது பாடியது என்ன என்ருல், 'ஒன்றுந் தெரியாது' என்பாராம்.

### இரக்கம்

ஒருநாள் பாரதியாருக்குக் கொஞ்சம் பணம் கிடைத்தது. மாணவரான விசுவநாதருடன் திருநெல்

வேலிக்குச் சென்றார். அங்குள்ள பாலத்தின் அருகே இருவரும் உலாவி உரையாடிக்கொண்டிருந்தனர்.

'இன்று ஒரு பெரிய வேலைசெய்யத் தொடங்க வேண்டும். இதோ இந்தத் தொகையைக்கொண்டு அமுதம் என்ற ஓர் இதழை வெளியிடவேண்டும். அல்லது........' என்று சிறிது சிந்தித்தார். அப்போது, பழக்காரி ஒருத்தி, 'இன்று எவ்வாறு சாப்பிடுவேன்? தெய்வமே! ஒன்றும் விற்கவில்லையே!' என்று வாய் விட்டுக் கூறியவாறு சென்றாள். அவள் கூறியது பாரதியார் காதில் விழுந்தது. 'அம்மா! பழக்காரி!' என்று கூப்பிட்டுக்கொண்டே ஓடி அவளை நிறுத்தினார். அவள் நின்றாள்.

'அம்மா! ஏன் அப்படி வருந்துகிறாய்? உன் பசி என் பசியில்லையா? கூடையில் எவ்வளவு பழம் வைத்திருக்கிறாய்?'

பழக்காரி மகிழ்ந்தாள். 'நீ நல்ல புண்ணியவான் சாமி!' என்று கூடையை இறக்கினாள். பாரதியார் தம் மாணவரையுங் கூப்பிட்டார். இருவரும் வேண்டிய வரையிற் பழங்களைத் தின்றனர். கொஞ்சம் மூட்டையுங் கட்டிக்கொண்டனர். கூடையில் மேலும் இருபது பழங்கள் இருந்தன.

'அம்மா! பாரதி தந்தானென்று, இப் பழங்களை நீயும் சாப்பிடு. உன் குழந்தைகளுக்குங் கொடு,' என்று கூறிக்கொண்டே ஆறு ரூபாய் எடுத்து அவளிடம் அளித்தார். அவள் திடுக்கிட்டாள். 'சாமி! கூட இரண்டு ரூபா கொடுத்துவிட்டீர்களே!' என்று திருப்பிக் கொடுத்தாள்.

'உனக்கு எத்தனை குழந்தைகள்?'

'இரண்டு பெண்கள்.'

'எனக்கும் இரண்டு பெண்களே. தலைக்கு ஒரு ரூபா கொடு. இன்னும் இரண்டு ரூபா தருகிறேன். அதைச் செலவழித்து நன்றாகச் சாப்பிடு,' என்று மேலும் இரண்டு ரூபா கொடுத்தார். பழக்காரி நன்றி ததும்பும் நோக்குடன் கும்பிட்டுச் சென்றாள்.

'தனி ஒருவனுக்கு உணவில்லையெனிற் சகத்தினை அழித்திடுவோம்,' என்று பாடிய பாரதியார்,

> 'மனிதர் நோக மனிதர் பார்க்கும்
> வாழ்க்கை இனியுண்டோ?'

என்று பாடிக்கொண்டே சென்றார். மக்களை மக்கள் விழுங்கும் இக்காலத்திலே பாரதியார் ஒரு பேதையர்!

## பறவை மனம்

பாரதியாரின் உள்ளம் பறவை. சிறகடித்துப் பறப்பதில் இணையற்றது.

பாரதியாரும் அவர் மாணவரும் ஒருநாள் சிந்து பூந்துறை ஆற்று மண்டபத்தில் அமர்ந்திருந்தனர். பாரதியார் திடீரென எழுந்து, 'எடுத்த காரியம் யாவி னும் வெற்றி,' என்ற பாட்டைப் பாடினார். பிறகு, அமர்ந்தார். மாணவரைப் பார்த்து, 'இப்போது ரவீந்திர நாத் டாகூர் எங்கே வந்திருக்கிறார்?' என்றார்.

'மதுரையில்.'

'உடனே புறப்படு மதுரைக்கு. நான் அவரை ஒருகை பார்க்கிறேன்.'

'நாம் போவதற்குள் டாகூர் சென்றுவிடுவார்.'

'அட அபசகுனமே! நம் தமிழ் நாட்டுக்கு வந்த டாகூர் நம்மைக் காணுமலா செல்வது? தந்தி கொடு.'

'முகவரி?'

'அடடா!' 'டாகூர், மதுரை' என்ருற் போதுமே! தந்தி பறக்குமே!'

'நல்லது! என்ன அறிவிப்பது?'

'தமிழ்நாட்டுக் கவியரசர் பாரதி தங்களைக் கண்டு உரையாட வருகிருர்,' என்று அடியப்பா தந்தி!'

'அங்கே போய் என்ன செய்வீர்கள்?'

'நாம் டாகூரை ஒன்று கேட்போம்! 'நீர் வங்கக் கவி. நாம் தமிழ்க்கவி. ஓரிடத்திலே ஒரு கூட்டம் கூட்டுவோம். நீர்பெற்ற நோபல் பரிசை அவைமுன் வைத்து விடுக. நாமும் பாடுவோம். நீரும் பாடும். அவையோர் யார் பாட்டுக்கு மதிப்புக்கொடுக்கிருர்களோ, பார்ப் போம். எமது பாட்டையே மெச்சுவர். உடனே, உம் கையால் அந்த நோபல் பரிசை அளித்துச் செல்க,' என்போம்.

'அது எங்ஙனம்? அவர் பாடுவது வங்கமொழி. நீங்கள் பாடுவது தமிழ்மொழி. மேலும், வங்கமொழிக்குக் கிடைத்த பரிசு தமிழுக்குக் கிடைப்பதெங்ஙனம்?'

'அடடா! இறைவன் தமிழனுக்கு எல்லாம் வைத்தான். அறிவைமட்டும் வைக்கவில்லை! நேற்றுப் பிறந்த வங்கமொழி நோபல் பரிசு வாங்கவேண்டும். 'கல் தோன்றி மண்தோன்ருக் காலத்தே முன்தோன்றி மூத்த தமிழ்மொழி அதற்குத் தகுதியற்றதா?'

இவ்வாறு கூறிய பாரதியார்,

"வானம் அளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே,"

என்ற பாட்டையும், 'யாமறிந்த மொழிகளிலே' என்ற பாட்டையும் வீரவெறியுடன் பாடினார்.

மாணவர் பணிவுடன், "மன்னிக்க வேண்டும். வங்கத்திற்குத் தமிழ் தாழ்ந்ததில்லை. எனினும், அவர் உலகப் பெருங் கவிஞர். தாங்கள் தமிழ்க்கவிஞர்," என்றார்.

பாரதியார் வெறுப்புடன் நோக்கினார். 'அங்ஙன மாயின் நாம் உலகப் புகழ்பெற முடியாதா? அட கோழையே!' என்று பெருமூச்சுவிட்டார்.

பாரதியாரின் இத்தகைய எண்ணம் எல்லாத் தமிழ ருக்கும் இருந்தால் எத்துணை நன்மை! 'எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியார்—திண்ணிய ராகப் பெறின்' அன்றோ?

## உருப்படாது

பாரதியார் எங்கும் அரசாங்க ஆணையின்றிச் சொன் முழக்கஞ் செய்வது கூடாது. எங்குஞ் செல்லவும் இய லாது. செல்லவேண்டுமானால் அரசினர் ஆணை வேண் டும். வெளியான் ஆட்சிசெய்யும் வேடிக்கை! சொந்த நாட்டிலே பிறர்க்கடிமை!

ஒருநாள் பாரதியார் மாணவருடன், ஆற்றங்கரை யிற் கதிரவன் மறையுங் காட்சியிலே ஈடுபட்டு நின்றார். அவருடைய பறவை மனம் கட்டுப்பாட்டினைக் கடந்தது.

'விசுவநாதா! எனக்கு ஒரு சிந்தனை உண்டாயிற்று.'

'என்ன?'

'நான் விவேகானந்தர்போல மதத்தொடர்பான சொற்பொழிவு செய்வேன், பார்!'

'முடியாதே!'

'முடியாதென என் அகராதியிற் கிடையாதப்பா! நெஞ்சில் உரமின்றிக் கோழைபோலக் குழையாதே! உடனே நான் உரைப்பதுபோலச் செய்.'

'நல்லது!'

'அப்படி அறை பாண்டியா!............நாம் திருநெல் வேலியில் மதப் பொதுவான சொற்பொழிவுகள் செய் யப்போகிறோம். அது ஒரு வாரம் வரையில் ஊரை ஆரவாரம் ஆக்கும். அதற்கு உடனே அறிக்கை அச் சிடக் கிளம்பு.'

'என்னவென்று அச்சிடுவது?'

'எதற்கெடுத்தாலும் வினவா?' 'தமிழ்க்கவிஞர் பாரதியார் திருநெல்வேலியிற் பேரவை கூட்டி. உண்மை யான இந்து மதம், இஸ்லாம், கிறித்தவம், பௌத்தம் முதலான எல்லா மதங்களைப்பற்றியும் இனிமையாகப் பேசுவார். வெள்ளம்போல் மக்கள் கூட்டம் விழைந்து வந்து கேட்டல் வேண்டும்,' என்று பதினாயிரம் அறிக் கைகளை அச்சிடுதல் வேண்டும். ஊரெல்லாம் வாரி யிறைத்தல் வேண்டும்! நுழைவுக் கட்டணம்: முதல் வகுப்பு 15 ரூபா. இரண்டாம் வகுப்பு 10 ரூபா. மூன் றாம் வகுப்பு 5 ரூபா. இந்த ஊரில் நூறாயிரம் நொடியிற் சேர்ந்துவிடும். பிறகு, மதுரை, திரிசிரபுரம், சேலம், கோவை, காஞ்சி, சென்னை என்று எங்கும் செல்வோம். அப்புறம் நாமே இந்நாட்டு மன்னர்!—என்ன?'

'நல்லது! ஆனால், தாங்கள் 'கலெக்டர்' ஆணை பெற்றுத்தானே பேசமுடியும்?'

'அப்படியா? ஆனால், வா.'

பாரதியார் எட்டையபுரம் தோட்டத்திலே கலெக்டர் பங்களாவுக்குச் சென்றார். காவலாளியின் வாயிலாகச் சொல்லி யனுப்பினார். கலெக்டர் வந்து பார்க்க அனுமதி கொடுத்தார். பாரதியார் உள்ளே சென்று தம் விருப்பத்தைக் கூறினார். கலெக்டர் மறுநாள் வந்து பார்க்கச் சொன்னார்.

பாரதியார் உள்ளம் பறவையென மகிழ்ச்சியிலே சிறகடித்துப் பறந்தது. தம் மாணவரிடம், 'நாளை அனுமதி வந்துவிடும்! அடி அறிக்கைகள்? கொட்டு முரசு!.........அனுமதி வராவிட்டால்? பரவாயில்லை! எப்படியும் பேசுவோம்,' என்றார்.

மறுநாள் கலெக்டரை வந்து கண்டார். 'கூடாது! இன்னும் ஒரு வாரம் கழித்துச் சொல்கிறேன்,' என்றார் கலெக்டர். பாரதியார் உள்ளம் இடிந்தது.

'இந்த உத்தரவும் கட்டுப்பாடும் இருக்கும் வரைக்கும் இந்த மக்கள் குழு உருப்படாது!' என்று கூறிக் கொண்டே எட்டையபுரம் பங்களாவிற்குச் சென்று உண்டு படுத்துறங்கினார்.

திருநெல்வேலியிற் செய்யமுடியாமல் வாட்டமுற்ற பாரதியாரின் இந்துமதச் சொற்பொழிவின் ஆர்வம், பிறகு, செட்டிநாட்டிற் காரைக்குடியில் இந்து மதாபிமான சங்க வாழ்விலே நிறைவுற்றது.

பாரதியார் கட்டுப்பாட்டிலே நிற்பவரல்லர் என்பதும், இரக்கமும் குழந்தையுள்ளமும் உடையவரென்

பதும் இதுகாறுங் கூறியவற்றால் அறியப்படும். பாரதியார் சாதிக்கொடுமையைத் தகர்த்தவர். அதனால் வந்த இன்னலை இன்பமுடன் ஏற்றவர்.

பாரதிக்குப்பின்

நம் உரிமைக்கவிஞர் பாரதியார் உண்டாக்கிய புரட்சிக்கனல் அவரோடு அணைந்துவிடவில்லை. அவர் ஏந்திய அனலை வளர்த்தவர்கள் பலர். அவருடன் இருந்து பழகிய **கனக-சுப்புரத்தினம்** அவர்களிற் சிறந்தவர் எனலாம். இப்பொழுது 'புரட்சிக்கவிஞர்' என்றால் அவரையே குறிக்கும். கனக-சுப்புரத்தினம் பாரதியாரின் கருத்தை மணங்கமழ வெளியிட்டுப் பரப்பினர் என்பதும் மிகையாகாது.

சாதி வெறி மிகுந்த நாட்டிலே பாரதியார் பட்ட இன்னல்களை அறிவோம். அவருக்குப்பின் சாதி வெறியைப்போக்க முயன்றவர் கவிஞர் பாரதிதாசன். மற்றும் புதிய உவமை நயங்களை வெளியிட்ட பாரதியாரைப் போலவே, மேலும் புத்தம் புதிய உவமைகளை நயம்பட வெளியிட்டவர் பாரதிதாசன்.

ஒருநாள் பாரதியார் புதுவையில் தாம் குடியிருந்த வீட்டிற் படுத்தவாறே பாவியற்றிக் கொண்டிருந்தார். அப்போது பாரதிதாசனும், 'புதுவைக் குயில்' எனப் படும் சிவா தாத்தா என்பவரும் பாரதியாரைக் காண வந்தனர். பாரதியார் பா இயற்றுவதை யுணர்ந்து வாளா அமர்ந்திருந்தனர். பா இயற்றிக் கொண்டிருந்த பாரதியாருக்குச் சிந்தனை தடையுற்றது. இது பா இயற்றுவோருக்குங் கட்டுரை யெழுதுவோருக்கும் இயல்பான வழக்கம். பாரதியார் சிந்திப்பதைக் கண்ட பாரதிதாசன் அருகே சென்று அமர்ந்து, பாவைப் படித்துப்பார்த்தார். அங்கு வேண்டிய சொன்மலர் பாரதி

தாசன் உள்ளத்தே வந்தது. அதனைப் பாரதியாரிடங் கூறினார். 'பேஷ்! சுப்பு! அமுதம்!' என்று கொண்டாடினார் பாரதியார்.

விதவையின் இன்னலை—மனக் குமுறலை—வெளியிட வந்த பாரதிதாசன்,

"எனை மணந்தார் இறந்தாரென் குற்றம் அல்ல!
இறந்தவுடன் மங்கலநாண் நல்லா டைகள்
புனைமலர், குங் குமம், அணிகள் போன துண்டு;
பொன்னுடலும் இன்னுயிரும் போன துண்டோ?"

என்று இளமங்கையின் உண்மை நிலையை எடுத்தோதுந் துணிவைப் பாராட்டாமலிருப்ப தெங்கே? இம்மட்டோ? இயற்கை நெறியையும்,

"மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ?
பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு பார்த்த துண்டோ?"

என எதுத்துக்காட்டி இடித்துரைக்கின்றார் விதவை மணத்தை ஆதரித்து.

பெண்மையைப் பாராட்டி, 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக' வாழவேண்டுமென்று விரும்பிய பாரதியாரின் கருத்துக்குப் பொற்பணி பூண்டாலனைய இம்முழக்கினை உன்னுந்தோறும் உன்னுந்தோறும் உவகை யெழுகின்றது.

'நாயினுங் கீழாய்ச் செந்தமிழ் நாட்டார் நலிவதை'க் கண்டு, 'ஓய்த லின்றி அவர் நலம் எண்ணி,' அச்சமின்றி, 'உழைத்திட' வந்த பாரதிதாசன்—'அந்த வாழ்வுதான் எந்த நாள் வரும்?' எனத் தமிழரின் சிறப்புறு முந்தைய நாட்களை யெண்ணி யெண்ணி மனம் வெதும்பிய பாரதி

தாசன்—இயற்கை யெழிலையும் எடுத்தியம்பத் தயங்க வில்லை.

"குட்டைப் பனைமரம் ஒன்றும்—எழிற்
கூந்தல் சரிந்த ஓர் ஈந்தும்
மட்டைக் கரங்கள் பிணைத்தே—இன்ப
வார்த்தைகள் பேசிடும் போது
கட்டுக் கடங்கா நகைப்பைப்—பனை
கலகல வென்று கொட்டும்"

இந்த இன்ப அமுது பாரதிதாசனின் எழுச்சி நிறைந்த கற்பனையின் ஒரு துளி!

"மாலைப் போதில் சோலையின் பக்கம்
சென்றேன்; குளிர்ந்த தென்றல் வந்தது;
வந்த தென்றலில் வாசம் கமழ்ந்தது;
வாசம் வந்த வசத்தில் திரும்பினேன்;
சோலை நடுவில் சொக்குப் பச்சைப்
பட்டுடை பூண்டு படர்ந்து கிடந்தது
குலுக்கென்று சிரித்த முல்லை
மலர்க்கொடி கண்டேன்! மகிழ்ச்சி கொண்டேனே!"

இந்த எளிய, இனிய, உளத்தை மயக்கும் நடை, 'உரை நடையா? பாவின் நடையா?' என நம்மைத் திகைக்க வைக்கவில்லையா?

உண்மையும் இன்பமும் அழகும் நிறைந்த கவிச் செல்வரான பாரதிதாசனின் தமிழ்ப் பற்றும் பாரதியார் கருத்தின் மலர்ச்சியாக விளங்குகிறது. 'தமிழை யழித் வனைத் தாய் தடுத்தாலும் விடேன்' என்னும் துடிப் புடைய புதுவைக் கவிஞர் பாரதிதாசன்,

"துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ
இன்பஞ் சேர்க்க மாட்டாயா?—எமக்
கின்பஞ் சேர்க்க மாட்டாயா?—நல்
அன்பிலா நெஞ்சில் தமிழைப் பாடிநீ
அல்லல் நீக்க மாட்டாயா?—கண்ணே!
அல்லல் நீக்க மாட்டாயா?"

என்று பண்ணினிக்கச் சொல்லினிக்கப் பொருளினிக்க இசைக்கும் தமிழிசையை இசையரசுகளே யன்றிக் குழந்தைகள் பாடினாலும் நம் நெஞ்சையும் ஊனையும் உருக்கி இசை மயமாக்கவில்லையா?

பாரதியாருக்குப் பின் தமிழ்ப் பாக்களே புரட்சி யுற்றன என்பது முற்றும் உண்மை. பாரதிதாசன் பாரதியார் காலத்திருந்தவர். அவரைப்போன்ற பெருங் கவிஞரே எனலாம். மற்றும்,

"பாட்டுக் கொரு புலவன் பாரதியடா—அவன்
பாட்டைப் பண்ணோ டொருவன் பாடினனடா!-அதைக்
கேட்டுக் கிறுகிறுத்துப் போயினே னடா!"

என்று மயங்கிய கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்களும், அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையவர்களும் பாரதியாரின் கவிக் குழுவினரே. மற்றும் பல இளங்கவிஞர்களும் ஆங்காங்கே தோன்றியுள்ளனர்.

இங்ஙனம் பாரதியார் தமிழ்க் கவிதையுலகிற் புரட்சியை விதைத்தது வீண்போகாமல் வளர்ந்துவருகிறது. எட்டையபுரத்தில் 'பாரதி மண்டபம்' தமிழ்க் கவிஞரின் அடையாளமாக விளங்குகிறது. பாரதியாரை அவரிருக்கும்போது ஆதரவு செய்யாமல் விட்டதை நினைந்து வருந்திய தமிழ்நாடு, கவிமணி-தேசிகவிநாயகம் பிள்ளை, அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை, பாரதிதாசன்

*ஆகிய கவிஞர் பெருமக்களுக்கு அவர்கள் காலத்திலேயே பாராட்டும் பணமுடிப்பும் கொடுக்க முன்வந்தது. இவ் விழிப்பும் பாரதியாரால் விளைந்ததென்பதை விளக்க வேண்டியதில்லை. வாழ்க பாரதியார் புகழ்!*

"வாழ்க நிரந்தரம்! வாழ்க தமிழ்மொழி!
வாழிய வாழியவே!
வானம் அளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே!

ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே!
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே!

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையகமே!
தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நாடே!

வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழியே!!!
வானம் அளந்த தனைத்தும் அளந்த
வளர்மொழி வாழியவே!

**—பாரதியார்.**

